உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ஞானவாசிட்டத்தின் வைராக்கியப் பிரகரணார்த்த சங்கிரகம்.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ-முத்துராமலிங்கசுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமிகளால்

பரிசோதித்து

சென்னை

மிமோரியல் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விய ஹூ சித்திரைமீ






உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ஞானவாசிட்டத்தின் வைராக்கியப் பிரகரணார்த்த சங்கிரகம்.

---

அஃதாவது

சமுசாரத்தைப் பதினொருவிதமாய்ப்பிரித்துத்

தூடணஞ்செய்தானெனப்படும்.

அவைகளிற் சொற்பவிரிவு

மேற்கூறுகின்றார்.

சங்கதி-விபரம்.

சுபட்சத்தையும் இருவாசனையையும் மேற்படிலட்சணத்தையுங் கூறல். (கக)
சீவன்முத்தியைக்கூறல். (கஉ)
பிரதானமானகதையை யுபக்கிரமித்தல். (கஙு)
தீர்த்தயாத்திரைக்குப்போய் மீண்டுவரல் .(கச)
தினசரிதையைக்கூறல். (கரு)
வைராக்கியத்தை யுபக்கிரமித்தல். (கசு)
விசுவாமித்திரரைத் தசரதர்கொண்டாடல். (கஎ)
விசுவாமித்திரர் தசரதரைத்துதித்து இராமனைத்தரவேண்டுமெனல். (கஅ)
தசரதர் புத்திரவாஞ்சையாற் றளர்ந்தவசனராகிப் புத்திரனைக்கொடுத்தற்கு மனமிலாதுகூறல். ()
பின்விசுவாமித்திரமுனி முனிவுசெய்ய அதை வசிட்டர்பார்த்து அரசனைநோக்கிக்கூறியவணஞ்செய்தி.இராமனை விசுவாமித்திரர் தபசுஅமுதத்தை அக்கினிகரப்பது போலக்காக்கும் அரக்கர்தோடம் வாராவென்று கூறினர். (உ0)
குருவாக்கிய பரிபாலனஞ்செய்யவிரும்பிய அரசன் பரிசனங்களைப் பார்த்து இப்போது இராமன்யாது செய்கிறுனென விஞவ அவர்கூறுகின்றுர். ()
இருமுனிவரு மிராமனைச்சபைக்கு அழைத்துவாருங்களென்கின்றுர். (உஉ)



இராமன் சபைக்குவந்து பிதாமுதலியோரைமுறையாகவணங்கித் தன்னைவணங்கினவர் வணக்கங்களையும் அங்கிகரித்திருந்தனர். (உஙு)

"கைப்படுமிம் மாமோகங் காதலினுலாபத்தாற் கலந்ததன்றுற், செப்பரியவிராசையினுல் விவேகத்தால்வருமுணர்வின் செல்வமாகும்" ஆதலாலெங்களாற் போதிக்கப்படுவதாகிய பலசுருதியுத்தி அநுபவங்களால் அவனுக்கு வந்த மோகம்போய் எங்களைப்போலத் தற்பதத்திலிராமன் விசிராந்தியடைவானென் றரசனுக் கிருமுனிவரு முரைத்தருளினர். (உச)

அதைக்கேட்ட அரசன் விவகார ரகிதரானவுங்களைப்போல் ராசரிக்கப்பிரவிருத்தி லிருக்குமியாங்க ளிருக்கலாமாவெனச் சொல்லுவானென்பதை யுட்கொண்டவர்களா யிருமுனிவரு மிராமன் எங்களைப்போற் சீவன்முத்தனுகி யுமதவிப்பிராயப்படிக்கே விவகாரதிசையிலிருந்து மிராதவனுய் வேண்டியவண்ண மிராச்சியபரிபாலன விவகாரத்தை நடத்துவான் ஏதசரதஅரசனே யோசியாதீர் என்றிசைத்தனர். (உரு)
முன்பிதாப்போதித்தல். (உசு)

வசிட்டர் "வெலற்கரியதீ முயற்சிவிடையமெனும்பகையெளிதின் வென்ற சூரா - கலக் குறுபே

தையர்க் குரித்தாமடஞ்செறி மோகக்கடலிற் கவிழேலென்றான்."

(உஎ)

விசுவாமித்திரர் இராமனைப்பார்த்து இராமாஉனதுமனதை வருத்தஞ்செய்யுஞ் சிந்தைக்கு விடயமெது, சொருபமெது, பரிணாமமெது, காரணமெது, அதைச்சொல்லு வாயாகினது நீங்கிக் காதலித்த தெதுவோ அதனையடைவாய் அதையன்றி அகத்துயர் மீட்டணுகாதுபோம் ஆதலால் விளம்பென்ன.

(உஅ)

அம்முனிவினாவிற்கு இராமன் மேககர்ச்சிதத்தாற் காமவெப்பந்தீர்ந்து களிப்புற்ற மஞ்ஞைபோல விசுவாமித்திரர் வாக்கியத்தைக் கேட்டு அதனாற் சொற்ப துக்கம்போய்ச் சொற்ப சந்தோஷத்துடன் விசுவாமித்திரரைப்பார்த்து "அருண்மூர்த்தி-சேட்டமுறுமாதவ நீ மடவனேனைச் செப்பெனமுன் செப்புதலாற் செப்புகின்றேன், கேட்ட ருடிமேலவர் சொன் மறுக்குனரி யாரென வினிது கிளத்தலுற்றான்."

(உகூ)

பிதாவாகிய இந்தத் தசரதனது மனையிலுதித்து வளர்ந்து சகல வித்தைகளையு மப்பியாசித்தந் தக்காணத்திற் றரித்துச் சத்துக்க ளாசாரப்படி சென்று கங்கைமுதலிய அறுபத்திராயிரங்கோடி புண்ணிய தீர்த்தாடனஞ் செய்து வரவும் இந்தச்



சகத்தின்கண் உள்ள மிகுந்த மோகப்பிராந்தி அனைத்துந் தீர்ந்தது. அதுயாதினாலெனில் என்மனத்திலித்தன்மையான விசாரமுதித்ததெனல். அவையெத்தன்மையதெனிற் கூறுகின்றேன். இச்சகத்தில் அற்பமும் சுகமிலவேயிலை. அதையன்றி ஒருவன் மரணத்தையடைதல் மீண்டு சனித்தற்கே. ஒருவன் சனித்தல் மீண்டு மரித்தற்கே ஆதலாலியாவு மநித்தியமேயாம். அதையன்றி "மேவுபெருஞ் செல்வத்துக்கிடமாகு மெய்பொருளும், பாவமதாயாபத்துப் பயிலிடமாய்த் தம்மிற்றாம் பற்றின்றாயுந், தாவுமனக்கற்பனையாற் சம்பந்தமாயிருப்புச் சலாகைபோல" வுமிருக்கின்ற விடையத்தாலும் பூவலயத்தாலு மெதுபயன், அகஞ்சத்தத்துக்கு அருத்த மெத்தன்மைத் தென்றும், கருமாதீனமாய் வந்த சரீரமெத்தன்மைத்தென்றும், விசாரிக்கில் ஆத்மவெதிர்த்தமான விச்சகலமும் அத்தியந்தம் மித்தையாம். அதையன்றி அங்ஙனமுணரினொருவனுக்கும்பந்தமுமின்று மோட்சமுமின்று ஆதலால் மித்தையான இவற்றில் "யாதியார்பெற்றதென விவ்வண்ணமினை வேற்குவழிச்செல்வோர்க்கு-மோதுகானலிலம்பு முறைமைபோற் பொருண்முழுதினுசை மூளா" அப்படியிருந்தும் "பேதியாவித் துயர்போனெறிநாடிற் பெருந்தருத்தான் பெற்றதீயால்" தான்வேதல்போல் வேகின்றேன், உன்னாலடைந்த

மோகத்தை யுன்னாலே நீக்கிக்கொள்ள லாகாதா வென்பீரோல்,"திறவாவெய்யமோகம்மிடறடைகலாம்" அப்படிச் சொல்லுவானேன், உலகத்தில் உரோதனஞ்செய்து துக்கத்தைநிவிர்த்திப்பதுபோல நீயுஞ் செய்துகொள்ளுகிறதுதானே யென்பீரோல், சமுசார துக்கத்தைச் சிந்தித்து கண்ணீர்விட்டு ரோதனஞ்செய்யவேண்டி யத்தனிக்கில் என்ன இவன் அமங்களாசாரனு நிர்நிமித்தமு ரோதனஞ் செய்கிறுனென்னுஞ் சனுபவாதபயத்தினுலேயேஉரோதனஞ்செய்திலேனென்றுங் கூறி மேற்சமுசாரத்தைப் பதினொருவிதமாகத் தூடிக்கின்றுர்.(ங0)

அப்பதினோர்விதவிபரம்,தனம், ஆயுள், அகங்காரம், மனது, ஆசை, சரீரம், பாலியம், எவ்வனம், மாதர், சரை, காலம் எனப்படும். இவைகள் ஒவ்வொன்று இத்தனை விதமென்பதின் விபரம்யாதெனில்.

தனத்தை கூ
ஆயுளை கரு விதமாயும்
அகங்காரத்தை கக விதமாயும்
மனதை சகூ விதமாயும்
ஆசையை ககூ விதமாயும்
சரீரத்தை ககூ விதமாயும்
பாலியத்தை உகூ விதமாயும்
எவ்வனத்தை அ விதமாயும்
விதமாயும்



மாதரை கச விதமாயும்
சரையை சச விதமாயும்
காலத்தை கங விதமாயும்

ஷ சங்காரசத்தியை-உரு, விதமாயும் பிரகாராந்திரமாய்-எரு, விதமாயும், ஆக-க00, விதமாயும் இவ்வணங் கூறியதின்பின் மேற்கூறுகின்றுர். (ஙக)

இதுவரையிற்கூறிவந்த அத்தன்மையானவிடயதோட திருட்டியாகிய காடாக்கினியினுற் றெத்தமான என்மனதில் வாஸ்தவசலத்திற் கானற்சலந்தோன்றுததுபோல,இன்றியமையாதநித்திரை, பிச்சை, முழுக்கு, செளசம், ஆகிய விவகாரத்தை அன்றி, ராச்சிய பரிபாலனம் முதலிய போகேச்சைகளானவை உதியாவெனச்சொல்லினுர். (ஙக)

மரணசீவனங்களையும் விரும்பேன் என்றுர்.()

இப்போது தேவரீர் சன்னிதியிற் பரிசுத்தசித்தனுக இருக்கின்றபடியே இருக்கின்றேனென்றுர்.()

இப்போது நீர் என்புத்தியினுல் என்மனதைச் சித்தலயோபாய உபதேசத்தாற் பரிகரியாது விட்டாலினியொருபோதும் பந்தநிவிர்த்தியாகாதெனக் கூறினுர். (ஙச)

துன்பம் "புரிவிடங்கொல்வதோர் மெய்புலன் மறுபிறப்புங் கொல்லும்" என்றுர். (ஙரு)

சுகதுக்கமும் பந்து மித்திரர்களும் சீவன மரணங்களும் ஆகிய அனைத்தும் ஞானியினது சித்தத்தைப் பந்தியாது அஞ்ஞானியையே பந்திக்குமென்றார். (௩௬)

ஆயுளானது வாயுவினாற் சிந்தியமேக சலதிவலைக்கு ஒப்பாகுமென்றார். (௩௭)

நிகரற்ற விடையபோகமானது மேகத்திலெழாநின்ற மின்னலுக் கொப்பாகுமென்றார். (௩௮)

மநுடர்களுடைய எவ்வனமும் அதிலுதிக்கும் ஆசை ஆயுளாதிகளும் க்ஷணபங்குரமென்று இவைகளனைத்தையுஞ் சித்தத்தி லநுசந்தானஞ்செய்து சாந்தியையுடைய பெரியோராகிய நீங்கள் சமாதியோகத்தைச் சார்மின்களென் றுள்வெறுப்போடுங் கூறினார். (௩௯)

என் சொபாவமோ-இவ்வண்ணம் விசாரித்தறிந்தவெனது சிந்தை சிவநாயகன் வசமாகைக்கேயேய்ந்ததென்றார். (௪௦)

ஏய்ந்தவண்ண நிற்கிறதாவென்பீரேல், இறைவனைப் பிரிந்தாள்போல நிலையுமெய்தாவென்றார்()

ஆதலால் நிருவுபத்திரவமாயும், நிர்த்தோடமாயும், நிர்வுபாதியாயும், நிர்ச்சந்தேகமாயும், நிர்மோகமாயும், விளங்காநின்ற ஸ்திதியாதென்றார்.()



தீயினுளிரதம்போலக் காதல்செய் யின்பமிக்க விடயமாங் கனலில்வீழ்ந்துந் தீதுறுநிலைமை யேதுஎன்றார். (௪௩)

"அசைதருபுனலையன்றி யளக்கர்வே றிலாததேபோல்-வசனமாந்தொழிலேயன்றி வருபவந்தான்வேறின்று" என்றார். (௪௪)

"நசையுறுபெரியோரொங்ங னவையுறுதுயரந்தீர்ந்தா-ரிசையநீருணர்ந்ததந்த நிலையினையெனக்குச்சொல்வாய்" இந்நிலையிலதாவேனு முளதியம்பாராவேனும் அந்நிலையையமின்றி யகங்காமின்றி யானே துன்னுறமாட்டேனென்றார். (௪௫)

செய்வதேதெனிற் சோறும்வேண்டே னன்னயநீரும் வேண்டே னலம்பெறு துகிலும்வேண்டேன் என்றார். (௪௬)

முழுகுதருனமாதி நியமங்கண் முழுதுஞ்செய்யேனென்றார். (௪௭)

விழுமியகருமஞ் சம்பத்தாபத்தின் மேவேன் என்றார். (௪௮)

யாக்கைநழுவுவதன்றி யொன்று நயக்கிலன் என்றார், (௪௯)

மவுனியாகி யெழுதுமோவியம்போற் காமங்கோபம்பற்றின்றி நிற்பேன் என்றார். (௫௦)

(மேல் ஸ்ரீவான்மீகிவாக்கியம்.)

"கனமுகின்முன்னர்க்கேகா ரவந்தவிர்கலாபிபோன்றே, மனமகிழ்முனிவர்முன்னர் வினவுநல்விவேகந்தன்னு" லமலசீதமதியென இன்சொல் விரிந்தலர்மனத்து இனியோனுகிய ராமன் எனவுரைத்து வாய்மொழியமைந்து நின்றுன் என்றுர் ஆதிகவியாகிய ஸ்ரீவான்மீகிபகவான். (ருக)

ஞானவாசிட்டமென்றது, வைராக்கியம், முமூட்சு, உற்பத்தி, திதி, உபசமம், நிருவாணம்என்கின்ற ஆறுபிரகரணங்களை யுடையனவாம், அவற்றிலின்ன இன்ன பிரகரண மித்தனையித்தனை கதைகளையுடைய தென்பதைத் தெரிவிக்கின்றுர்.

(அவற்றின்விபரம்.)

முதலாவது வைராக்கியப்பிரகரணம். அதிற், சுகர்கதை-க, உ-வதுமுமூட்சுப்பிரகரணம்-க, ந-வது உற்பத்திப்பிரகரணம். அதில், ஞானவிண்மகன், லீலை கற்கடி, அயிந்தவர், வஞ்சவிந்திரன், மனம், பாலன், சித்தன், ஆகக் கதை-அ.

ச-வது திதிப்பிரகரணம். அதில், சுக்கிரன், தாமவியாளகடர், வீமபாசதிடர், தாசூரன், கசன், ஆகக்கதை-ரு

ரு-வது உபசமப்பிரகரணம். அதில், சனகராசன், புண்ணியபாவன், மாவலி, பிரகலாதன், காதி



உத்தாலகன், சுரகு, பாசவிபாசன், வீதகவ்வியன், ஆகக் கதை-கூ.

கூ-வது நிருவாணப்பிரகரணம், அதில், புசுண்டன், தேவபூசை, வில்வபலம், சிலை, அருச்சுனன், சதவுருத்திரன், வேதாளம், பகிரதன். சிாடசிந்தாமணியை யுட்கொண்ட சிகித்துவசன், கசன், மித்தையாபுருடன், பிருங்கி, இக்குவாகு, மிருகவியாதன், ஆகக் கதை-கச.

ஆகப்பிரகரண மாறுக்குகதை-சரு, க்கு விபரம், க-க்கு, உ, உ-க்கு, க, ந-க்கு, கூ, ச-க்கு, கூ, ரு-க்கு, க0, கூ-க்கு, கரு, இம்முறையாகப் பிரகரணத்திற்கு கதை யிலக்கங் கொள்ளவேண்டியது.

கக-வித தூடண ஆரம்பத்திற் கூறப்படும் அவதாரிகை யாதெனில்.

தனம், ஆயுள், அகங்காரம், மனம், ஆசை, சரீரம், பாலியம், எவ்வனம், மாதர், சரை, காலம், ஆகிய இவ்வேகாதசத்தைச்சிந்தித்தல், இவற்றிற்றனமூலத்திறுற் சமுசார சம்பந்தமான சர்வப்பிரயோசனமுஞ் சித்தித்தலின் முக்கியந் தனமென்று முன், தனவிசாரம், தனமிருக்கின் வெகுகால போக நிமித்தஞ் சிரஞ்சீவித்துவம் அபேட்சிக்கப் படுதலின் அதன்பின். ஆயுள், ஆயுளுந்தனமுமுறின்னான்கருத்தா போக்தாவென்று வெகுவித கர்த்துரு

த்துவ போக்துருத்துவாதி அபிமானப்பிரவிருத்தி வருதலின் அதன்பின், அகங்காரம், அகங்கார மிருக்கின் அதன்வசத்தால் விவிதசங்கற்ப விகற்பாத்மகமாக மனமுதித்தலின் அதன்பின். மனம். அதன்பின் நிரந்தர போகேச்சாரூபமான, ஆசை, அதன்பின் பேரழகுடைய போகஸ்தானமான, சரீரம், அதன்பின் அதன் அவஸ்தாவிசேட ரூபமான, பாலியமும், அதன்பின்,எவ்வனமும், அதன்பின் எவ்வனத்தின் முக்கியபோகத்துக்குரிய சர்வவிடயசமட்டிரூபமானமாதர், அதன்பின் போகத்துக் குரித்தன்றுயினும் போகேச்சைமிகுந்த சரை, அதன்பின் சருவசிருட்டி திதிசங்காரநிமித்தமான,காலம்,இதுவேகிரமாவிப் பிராயமென்றுணரத்தக்கது.

(சங்கதிவிபரம்.)

சங்கிரகமாகக் கூறியதை யித்தனுவதுயித்தனுவது கவிகளா லுணரத்தக்க தென்பதைத் தெரிவிப்பவராய்ச் சூசிப்பிக்கின்றார்.

முதற்சங்கதிவிபரம், பாயிரத்தில். முதற்கவி—
உ-வது, பாயிரத்தில்-உ-முதல், கச-வரை கவி
ங-வது, நூலாரம்பம், முதற் கவி
ச-வது, உ-முதல்-ரு-வரை கவி
ரு-வது, சா கவி
சா-வது, எ கவி



| | | |
|---|---|---|
| எ-வது, | கூ | கவி |
| அ-வது, | க0 | கவி |
| கூ-வது, | கக | கவி |
| க0-வது, | கக | கவி |
| கக-வது, | கஉ-கங | கவி |
| கஉ-வது, | கச | கவி |
| கங-வது, | கரு | கவி |
| கச-வது, | கசா, முதல்-உ0, வரை | கவி |
| கரு-வது, | உக-உஉ | கவி |
| கசா-வது, | உங-உச-உரு | கவி |
| கஎ-வது, | உசா-உஎ-உஅ | கவி |
| கஅ-வது, | உகூ-ங0-ஙக-ஙஉ | கவி |
| ககூ-வது, | ஙங-ஙச-ஙரு | கவி |
| உ0-வது, | ஙசா-ஙஎ-ஙஅ-ல்-ஒ | கவி |
| உக-வது, | ஙஅ-ல்-ஒ-ஙகூ-ச0 | கவி |
| உஉ-வது, | சக-வதுகவியில்-வ | கவி |
| உங-வது, | சஉ-வதுகவியில்-ஒஹூ | கவி |
| உச-வது, | சக-வதுகவியில்-ஜ | கவி |
| உரு-வது, | சஉ-வதுகவியில்-வஹூ | கவி |
| உசா-வது, | சங-சச-வதுகவியில்-ஜஹூ | கவி |
| உஎ-வது, | சச-வதுகவியில்-ஹூ-சரு-ல்-ஒ | கவி |
| உஅ-வது, | சரு,ல்,ஒ-சசா-வதுகவியில்-ஹூ | கவி |

உகூ-வது, சசு-வதுகவியில்-ஆறு கவி
ரு0-வது, சஎ-சஅ, சகூ-ரு0-வதுகவியில்-ஙி கவி
ருக, வது ககச, கவியில் உ கவி
ருஉ, வது ககச மூன்றும்பாதம், வ, கவி
ருரு, வது ககச நாலாம்பாதம், வ, கவி
ருச, வது ககரு உ, கவி
ருரு, வது ககரு உ, கவி
ருசு, வது ககசு உ, கவி
ருஎ, வது ககசு வ, கவி
ருஅ, வது ககசு வ, கவி
ருகூ, வது ககஎ உ, கவி
சo, வது ககஎ வ, கவி
சக, வது ககஎ வ, கவி
சஉ, வது ககஅ உ, கவி
சரு, வது ககஅ உ, கவி
சச, வது கககூ உ, கவி
சரு, வது கககூ-ல்-உ-கஉo-ல்-உறு, கவி
சசு, வது கஉo வஹ, கவி
சஎ, வது கஉக-முதற்பாதம் வ, கவி
சஅ, வது கஉக-இரண்டாம்பாதம்-வ, கவி
சகூ, வது கஉக, மூன்றும்பாதம் வ, கவி
ரு0, வது கஉக, நாலாம்பாதம் வ, கவி
ருக, வது கஉஉ, கவி



ரு0-வது, ஷை சங்கதி சங்கிரக அனந்தரம் விரிவாய்

(கவி, தனதாடணம்)

ருo-இனமி, என்றதில்தனமுத, கவி-ஜபஉ, க்குதாடச
ருக-கருமவ, கவி க, க்கு தாட உ
ருஉ-தீதடை, கவி உறு, க்கு தாட ரு

(இவை-ஆக கூ,)

(கவி-இனி, ஆயுள்தாடணம்)

ருஉ-தீதடை, என்றதில் தலைகீ, கவி, வஹ, க்கு தாட க
ருரு-வளர்பு, கவி, க, க்கு தாட ரு
ருச-சரற்க கவி, க, க்கு தாட சு
ருரு-அடைய கவி, ஹ, க்கு தாட க
ருசு-அவிவே கவி, உ, க்கு தாட க
ருஎ-சின்ன கவி, உபஉ, க்குதாட ரு

(இவை-ஆக, கரு.)

(கவி, இனி, அகங்காரதாடணம்.)

ருஎ-சின்ன, என்றதில், இடர், கவி, ஙி, க்கு தாட க
ருஅ-மனத்து கவி, க, க்கு தாட ச
ருகூ-அகங்கார கவி, க, க்கு தாட சு

(இவை ஆக, கக.)

(கவி, இனி, மனதாடணம்.)

சுo-காமமுத கவி, க, க்கு தாட ரு
சுக-காதலென கவி, க, க்கு தாட உ
சுஉ-வேறுபொய், கவி, க, க்கு தாட உ
சுரு-கடுமனவன், கவி, க, க்கு தாட அ
சுச-வரையிலெழு கவி, உ, க்கு தாட க

(இவை ஆக-கசு.)

(கவி-இனி-ஆசா தூடணம்.)

சுச-வரையி, என்றதில், கரைத, கவி, உ, க்கு தாட க
சுரு-ஆதரித்த கவி, க, க்கு தாட ங
சுசு-பின்னுறு கவி, க, க்கு தாட ச
சுஎ-முதிர்பரு கவி, க, க்கு தாட ங
சுஅ-காவின்மத, கவி, க, க்கு தாட ங
சுகூ-பைந்தொடி, கவி, க, க்கு தாட உ

(இவை ஆக, கசு.)

(கவி, இனிச்சரீர தூடணம்.)

எ0-ஈரித்த கவி, க, க்கு தாட ச
எக-அற்பமதா கவி, க, க்கு தாட கூ
எஉ-விதியுமர கவி, க, க்கு தாட ங
எங-மின்னிட கவி, உ, க்கு தாட ங

(இவை ஆக, ககூ.)

(கவி, இனி பாலிய தூடணம்.)

எங-மின்னிட, என்றதில், மன்னுகி, கவி, உ, க்கு தாட க
எச-தொலைவறு கவி, க, க்கு தாட கங
எரு-மண்ணுக கவி, க, க்கு தாட கஉ

(இவை ஆக, உசு.)

(கவி, இனி எவ்வன தூடணம்.)

எசு-இப்பருவத் கவி, க, க்கு தாட ங
எஎ-கருத்தெ கவி, க, க்கு தாட ங
எஅ-எத்திற கவி, க, க்கு தாட உ

(இவை ஆக, அ.)



(கவி, இனி மாதர் தூடணம்.)

எகூ-சந்துறு கவி, க, க்கு தாட உ
அ0-மேருவின் கவி, க, க்கு தாட ரு
அக-மேவுதற்க கவி, க, க்கு தாட உ
அஉ-மாமடஞ் கவி, க, க்கு தாட உ
அங-முதுதுயர் கவி, உ, க்கு தாட உ
அச-பாரியையு கவி, க, க்கு தாட க
அரு-வந்துறு கவி, க, க்கு தாட ச

(இவை ஆக, கச.)

(கவி, இனிச்சரை தூடணம்.)

அசு, ஈறறு கவி, க, க்கு தாட ரு
அஎ, புரையுட கவி, க, க்கு தாட அ
அஅ, விருத்த கவி, க, க்கு தாட க0
அகூ, குற்றமு கவி, க, க்கு தாட ரு
கூ0, ஆதரச்செ கவி, க, க்கு தாட ரு
கூக, மரணமா கவி, க, க்கு தாட சு
கூஉ, நரையுறு கவி, உ, க்கு தாட ரு

(இவை ஆக, சச.)

(கவி, இனிக் கால தூடணம்.)

கூஉ, நரையுறு, என்றதில், கிரைப, கவி, உ, க்கு தாட க
கூங, மகரநீர் கவி, க, க்கு தாட ங
கூச, விழுமிய கவி, க, க்கு தாட உ
கூரு, அகல்பூத கவி, க, க்கு தாட ங.
கூசு, சிறியசக கவி, க, க்கு தாட ங
கூஎ, கைப்பி கவி, க, க்கு தாட க

(இவை ஆக, கங.)

(கவி இனி ஷெசங்காரசத்தியின் தூடணம்.)

| | | | |
|---|---|---|---|
| கூஅ, தொல்லு | கவி, க, க்கு | தூட | க |
| கூகூ, படர்பூதந் | கவி, க, க்கு | தூட | சு |
| க00, மன்னுசர | கவி, க, க்கு | தூட | க |
| க0க, பொன்னுல, | கவி, க, க்கு | தூட | எ |
| க0உ, பின்னுறத், | கவி, க, க்கு | தூட | ரு |
| க0ங, மிகவுண, | கவி, க, க்கு | தூட | ங |

(இவை ஆக, உரு.)

(கவி இனி ஷெ சத்தியைத்தானே பிரகாராந்
திரமாகத் தூடணஞ்செய்கின்றூர்.)

| | | | |
|---|---|---|---|
| க0ச, பொருள்க, | கவி, க, க்கு | தூட | கூ |
| க0ரு, பெரியவர் | கவி, க, க்கு | தூட | கங |
| க0சு, கொண்ட, | கவி, க, க்கு | தூட | கஉ |
| க0எ, சித்தர்பொ, | கவி, க, க்கு | தூட | க0 |
| க0அ, இன்னபோ, | கவி, க, க்கு | தூட | அ |
| க0கூ, மனேவியும் | கவி, க, க்கு | தூட | ங |
| கக0, பகையெலா, | கவி, க, க்கு | தூட | ங |
| ககக, கற்பமாங் | கவி, க, க்கு | தூட | ங |
| ககஉ, கற்றவர் | கவி, க, க்கு | தூட | சு |
| ககங, பிணிசெ | கவி, க, க்கு | தூட | அ |

(இவை ஆக, எரு.)

(ஆக இவை, முன், உரு, பின் எரு, ஆக, க00,
காலதூட்ணத்தையுஞ்சேர்த்து ஆக, ககங.
தனம்முதலிய பதினொருவித தூட்ணம், ஆக,
கூடியதூட்ணம்-உகூஉ.

ஞானவாசிட்டத்தின் வைராக்கியப்
பிரகரணர்த்த சங்கிரகம் முற்றுப்பெற்றது.

---

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## ஞானவாசிட்டக்கதைகளின் அவதாரிகை.

பகவற்கீதை அத்தியாயங்களின் அவதாரிகை.
பிரமகீதை அத்தியாயங்களின் அவதாரிகை.
உபநிடதம் மூலம்.
சொரூபசாரம் மூலம்.
சுருதிசாரமகாவாக்கியம் மூலம்.
மகாவாக்கியம் மூலம்.
ரிபுகீதை - மனனயுத்தி மூலம்.
முத்திகண்டத்தின் சொரூபநாமம் மூலம்.
ஆத்மானத்ம வைலட்சணநிருபகம்

---

இவை
சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்
**ஸ்ரீ-முத்துராமலிங்கசுவாமிகளின்**
ஆதீனத்திற்குரிய
**ஸ்ரீ-சிதம்பரசுவாமிகள்**
மாணக்கர்களிலொருவராகிய
**அ - இராமசுவாமிகளால்**
பலபிரதிருபங்களைக்கொண்டு ஒருவாறுராய்ந்து
சென்னை
**மிமோரியல் அச்சுக்கூடத்திற்**
பதிப்பிக்கப்பட்டன.

---

விய ஸு சித்திரைமீ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ஞானவாசிட்டக்கதைகளின் அவதாரிகை.

(க-வது. வைராக்கியப் பிரகரணம்.)

(அ-கை)வடநூலாசிரியராகியவான்மீகிபகவானியற்றற்கிச்சித்த கிரந்தம் நிர்விக்கினமாகநிறைவேறவுங், குருசீட பாரம்பரியமாக யாவரும் சிரவணஞ்செய்யவுஞ், சிட்டாசாரத்தாற் பெற்ற விஷ்டதெய்வ நமஸ்கார விலக்கணமான மங்களத்தை யங்கீகரிக்கின்றார். (க)

(சுகர்கதை-அ-கை.)

அத்தருணத்தில் திவ்வியாதிவ்வியசபையிரண்டினாலுஞ் சந்தோஷிக்கப்பட்ட யிரகுநந்தனனைக் குறித்து மிகவுமுச்சாகித்தவராய் விசுவாமித்திரர் சித்திரமான சுகர் விருத்தாந்தத்தைச் சொன்னாரென்பது இக்கதை யருத்தம். (உ)

(உ-வது. முமுட்சுத்துவப்பிரகரணம்.)

(அ-கை-வசிட்டர் வாக்கியம்.) (க)

(ங-வது உற்பத்திப்பிரகரணம்.)

(ஞானவிண்மகன் கதை-அ-கை.)

இனி உற்பத்திப்பிரகரணம். அதில், ஞான விண்மகன், லீலை, கற்கடி, அயிந்தவர், வஞ்ச விந்திர

ன், மனது, பாலன், சித்தன், சத்தபூமிகை யுடைய லவணன், என்னு மொன்பது கதைகளாம். அவைகளின் அன்னியோன்னிய சங்கதிகளும் அவசரப்படி மேற்சொல்லப்படும். (௧)

(லீலைகதை-அ-கை.)

முன் ஞானவிண்மகன் கதையிற் சித்துருபமான பரமாத்மாவின் மாயை மனதாய்ச் சர்வசகத்தையுஞ்சிருட்டிக்கின்றதெனக்கூறப்பட்டது. இனி லீலைகதையிற் சகம்மாயா மயமென்றதை வெளிப்படையாக்க மாயை துர்க்கட கடனாசமர்த்தை யெனத்தெரிவிக்கின்றார். (௨)

(கற்கடிகதை-அ-கை.)

முன் லீலைகதையில் பிரபஞ்ச திருட்டிக்கு நாசம்வர மாயிகத்துவஞ் சொல்லப்பட்டது. இனிக் கற்கடிகதையிற் பிரமதிருஷ்டியைத் திடஞ்செய்தற்காக அப்பிரமத்துக்குப் பாரமார்த்திகத்துவஞ் சொல்லப்படுகின்றது. (௩)

(அயிந்தவர் கதை-அ-கை.)

முன் கற்கடிகதையிற்பிரமமே யிதனைத்துமென்று பிரமதிர்ஷ்டி சொல்லப்பட்டது. இப்போது அயிந்தவர்கதையி லவ்வருத்தத்தின் சமாதான நிமித்தம் விசுவதிருஷ்டிக்கு மனோமயத்துவஞ்சொல்லப்படுகின்றது. (௪)



(வஞ்சவிந்திரன்கதை-அ-கை.)

முன் அயிந்தவர் கதையில் பிரபஞ்சத்திற்கு மனோமயத்துவஞ்சொல்லப்பட்டது. இப்போது கிரித்திரிமைந்திரன் கதையில் வாகியேந்திரிய வியாபாபாரத்தைப்பார்க்க மனோவியாபாரத்திற்கே பிரதானத்துவம் பிரதிபாதிக்கப்படுகின்றது. (௫)

(மனத்தின்கதை-அ-கை.)

முன் வஞ்சவிந்தின் கதையில் மனோவியாபாரத்திற்கே பிரதானத்துவம் ஆதலின் அதுவே சுகதுக்கபோகாயதனத்துவமாகலின்முக்கியமானசரீரமென்று சொல்லப்பட்டது. இப்போது மீட்டு மதன்சொரூபம்நிரூபித்தற்குச்சித்தத்தின்கதை யாரம்பிக்கப்படுகின்றது. (௬)

(பாலன் கதை-அ-கை.)

முற்கதையிற்சித்தசொரூபநிரூபிக்கப்பட்டது. இப்போது பிரபஞ்சமித்தையாரூபமாயினும் மனச்சங்கற்பமாத்திரத்தால் விசாரமற்ற மதியினர்க்குப் பாரமார்த்திகபுத்தி அதி திடப்படுவதெனப் பாலன்கதை தெரிசனத்தாற் சாதிக்கப்படுகின்றது. (௭)

(சித்தன்கதை-அ-கை.)

முன் பாலன் கதையிற் பிரபஞ்சமித்தையேயாயினு மவிசாரதெசையிற் பரமாத்மாப்போற்றோற்றுமெனப்பட்டது. இப்போது சித்தன் கதையிற்

கேவலந்தோற்றமாத்திரமன்று, மற்றென்னெனில் சுகதுக்காநுபவமுண்டாதலின் அர்த்தக்கிரியாதி யுளதாம். ஆயினும் மனோவிலாசமாத்திரம் பிரபஞ்சமெனப்படுகின்றது. (அ)

(உற்பத்திப்பிரகரணம்.)

(அ-கை)முன் சித்தன்கதையிற்றன் சங்கற்பத்தாலற்பகாலத்திற்றானே அனேகவருடமனதிற்குச் சம்சாரஞ் சொல்லப்பட்டது. அஃதெங்ஙனமென்றாகாஞ்சைவரின் அதனைச் சாதிக்கு நிமித்தம் மனச்சாமார்த்திய மிதிற் சொல்லப்படுகின்றது. (கூ)

(ச-வது திதிப்பிரகரணம்.)

(சுக்கிரன்கதை-அ-கை.)

முற்பிரகரணத்திற் சகம் மனோ விலாசத்தினுலுற்பன்னமாயிற்று. அஃது மியோகத்தால் மனோ விலாசநசிக்கின் நசிக்குமெனப்பட்டது. இப்பிரகரணத்தில் மனத்தினின்று முற்பன்னமான சகம் மனத்தின்கண்ணேயிருக்கின்றதென்றும் மனதுதனக்குக்காரணமான ஆத்மாவின்க ணிருக்கின்றதென்றுஞ்சொல்லப்படுகின்றது. அதிற், சுக்கிரன், ருமாதி, வீமாதி, தாசூரன், உபதேசமு,மென்னு மைந்து கதைகளுள. அவற்றிலிப்போது மனோமயமான திரிசியம் மனதோ டாத்மாவின்கணிருத்தலி னுதாரமாக வாத்மாவைத் தெரிவித்தற்கு ஆதேயமான திரிசியத்தைக்கூறல். (க)



(தாமவியாளகடர்கதை-அ-கை.)

முன் சுக்கிரன் கதையிற் சித்தமயம் சமுசாரமென்று தெரிவிக்கப்பட்டது. இந்தத்தாமாதிகதையிற்சித்தமயமான சம்சாரம் விவேகத்தாற்சித்தசாந்திவரிற் சிதையுமென்றும் விவேகமின்றேல் விர்த்திக்குமென்றுஞ்சொல்லுகின்றார். அதிற்சித்தப்பிரசாதத்திற்குரிய சாமக்கிரியையைத் தெரிவித்தற்கு மூன்று கவிகளாலுரைத்தல். (உ)

(வீமபாசதிடர்கதைக்கு-அ-கை இல்லை.) (ங)

(தாசூரன்கதை-அ-கை.)

முன் வீமாதிகதையிலகங்கார பரித்தியாகம் புருஷார்த்த நிமித்தமாமெனப்பட்டது. இனித்தாசூரன்கதையி லதனைத் தாபித்தற்காகச் சகத்திதிக்கு மாயாமயத்துவம் விரிவாகச் சொல்லப்படுகின்றது. அதிலிப்போதுஉபாயமுபதேசிக்கின்றார். (ச)

(கசன்கதை-அ-கை.)

முன்புதாசூரன்கதையில் சகத்திதிக்கு மாயிகத்துவஞ்சொல்லப்பட்டது. இப்போது திதிப்பிரகரணதாற்பரியஞ்சங்கிரகமாகவுபதேசப்பிரகாரமாய்ச்சொல்லப்படுகிறது. (ரு)

(திதிப்பிரகரணத்திற்கு-அ-கை இல்லை.) (சு)

(ரு-வது, உபசமப்பிரகரணம்.)

(சனகராசன்கதை-அ-கை.)

முன்பு சகவுற்பத்தி திதிகளுக்கு மனதே காரணமெனப்பட்டது. இப்போதஃதுபசமநிமித்த மு

பசமப்பிரகரண மாரம்பிக்கப்படுகிறது, அதில், சன
கன், புண்ணியபாவனர், பெலி, பிரகலாதன், காதி,
உத்தாலகன், சுரகு, பாசவிபாசர், வீதகவ்வியன்,
சீவன் முத்தனுக்காகாசகமனுதியின்மையென்னும்
பத்துக்கதைகளுள. அவற்றிற்சனகன் விர்த்தாந்த
த்தைப் பிரித்துரைத்தற்குப் பீடிகைசெய்கின்ருர்()

(புண்ணியபாவனர்கதை-அ-கை.)

முன்பாகாசபலம் வீழ்வதுபோற் றெய்வகதி
யாற் பெற்றசித்தர் கீதையின் சிரவணத்தாற் சன
கனுக்குச் சித்தோபசாந்தி சொல்லப்பட்டது. இப்
போது முன்சென்றஅனேகசென்ம சிந்தாவசத்தா
ற்சித்திக்கு மாத்மஞானத்தினுற் சித்தத்தின துபச
மம் புண்ணியபாவனர் கதையாற் சொல்லப்படுகின்
றது. அதிலிப்போது சித்தோபசமோபாய முபதே
சிக்கின்ருர். (உ)

(மாவலிகதை-அ-கை.)

முன்புசென்ற அனேகசென்மங்களைத் தொட
ர்ந்து நினைக்கும்வழியால்வரும் சொரூபஞானத்தா
ற் சித்தோபசாந்தி சொல்லப்பட்டது. இப்போது
புண்ணியமிகுதியா லேகதேசத்தில் விடயசம்பந்த
மானசுகமுஞ் சித்தோபசாந்தி நிமித்தமாமென்று
மாவலிகதையால் நிரூபிக்கின்ருர். அதில் வெகுகா
லபோகத்தினுற் போக்கியங்களி லருசிபிறந்ததெ
னல். (ங)



(பிரகலாதன்கதை-அ-கை.)

முன்பு மாவலிகதையிற் புண்ணியமிகுதியினு
ல் விஷயசென்னியமானசுகமு மேகதேசத்திற்சித்
தோபசாந்தி நிமித்தமாமெனச் சொல்லப்பட்டது.
இப்போ தீசுவரானுக்கிரகத்தினுல் ஓர்காலத் தாத்
மதத்துவபோத முண்டாகுமென்று பிரகலாதன்க
தையாற் பிரதிவாதிக்கின்ருர். (ச)

(காதிகதை-அ-கை.)

முன்பு ஈசுரானுக்கிரகத்தினுலே யுதித்தஆத்ம
தத்துவ க்ஞானத்தாற் சம்சாரோபசாந்தி சொல்ல
ப்பட்டது. இப்போது சித்தசெயத்தைத் தவிரச் ச
கன்மயமான மாயை யுபசாந்தியாகாதென் றறிவித்
தற்காக மாயா வைச்சித்திரியத்தைப் பிரதிபாதனஞ்
செய்ய இலவண விருத்தாந்தம்போற் காதிவிருத்
தாந்தமும் நிரூபிக்கப்படுகின்றது. (ரு)

(உத்தாலகன்கதை-அ-கை.)

முன்பு சித்தோபசாந்திநிமித்தம்மாயாவைச்சி
த்திரியஞ் சொல்லப்பட்டது. இப்போது திடயோ
காப்பியாசத்தினுற்,சித்தஞ்சஞ்சலமாயினும் உபசா
ந்தியாமென் றுத்தாலகர்கதையால் நிரூபிக்கின்ருர்.

(சுரகுகதை-அ-கை.)

முன்பு யோகாப்பியாசதாரிட்டியத்தாற் சித்த
விசிராந்தியா,மதுவே சமாதி யுத்தமவவத்தை யெ

ன்று கூறப்பட்டது. இப்போது அச்சித்தவிசிராந்தி சிவன்முத்திசாமியமென்று சுரகுகதையாற் சொல்லப்படுகின்றது. அதில்முன்பு இதமுபதேசித்தல்()

(பாசவிபாசர்கதை-அ-கை.)

முன்பு சித்தவிசிராந்தியே சிவன்முத்த சீமையெனப்பட்டது, இப்போது சித்தவிசிராந்தியின்றுயின் வெகுவிதப் பிரயாசமாமென்று பாசவிபாச சம்வாதம் நிரூபிக்கப்படுகின்றது. (அ)

(வீதகவ்வியன்கதை-அ-கை.)

முன்பு சித்தவிசிராந்தி யின்றெனில் வெகுவிதப்பிரயாச மென்னப்பட்டது. இப்போது சித்தவிசிராந்தி சித்தித்தற்குச் சங்கத்தியாகமும் பிராணநிரோதமுஞ் சமாதியப்பியாசமுஞ் செய்யவேண்டுமென வீதகவ்வியன்கதையா னிரூபிக்கப்படுகின்றது. அவற்றிற்சங்கத்தியாகத்தை வியந்துரைத்தல்.

(உபசாந்திப்பிரகரணம்.)

(அ-கை) முன்பு சித்தவிசிராந்தி சித்தித்தற்குச் சங்கத்தியாக பிராணநிரோத சமாதியப்பியாசங்கடெரிவிக்கப்பட்டன. இப்போதுசீவன்முத்தனுக்காகாசகமனு பாவாதி நிரூபணமுகத்தாற் சித்தத்திற்குபசமப்பிராப்தியை யுபசங்கரிக்கின்றார். (க0)

(சூ-வது, நிருவாணப்பிரகரணம்.)

(புசுண்டர்கதை-அ-கை.)

இனி நிருவாணப் பிரகரணம் நிரூபிக்கப்படுகிறது. அதிற் பதினைந்துகதைகளுள. அவற்றிற். புசு



ண்டன், தேவபூசை, வில்வபலம், சிலை, அருச்சுனன், சதருத்திரன், வேதாளம், பகீரதன், கிராடசிந்தாமணி, கசமென்னுங்கதைத் திரயகருப்பமுள்ள சிகித்துவசன், கசன், மித்தியாபுருடன், பிருங்கி, இக்குவாகு, வியாதன் பூமிகளு, மென்பதாம், அவற்றிற் பிராணவிருத்தி யனுசந்தானத்தினாற் சித்தவிசிராந்தியா னிருவாணம். புசுண்டன்கதையால் நிரூபிக்கப்படுகின்றது. அதிலிதமுபதேசிக்கின்றார். (க)

(தேவபூசைகதை-அ-கை.)

முன் பிராணவிருத்தி யநுசந்தானத்தால்வருஞ்சித்தவிசிராந்தியானிருவாணங்கூறப்பட்டது. இப்போததுபோலவே தேவபூசையாலுஞ் சித்தவிசிராந்தி லெட்சணமாமெனப்படுகின்றது. அதிற்றேகாபிமானஞ் சகலநிருவாணோபாயப் பிரதிபந்தமாதலி னதனிவிர்த்திக்காகக் கொஞ்சம் இதம் உபதேசிக்கின்றார். (உ)

(வில்வபலக்கதை-அ-கை.)

முன்பு நூதனமான தேவார்ச்சனை விதானத்தாலுஞ் சித்தத்தி னந்தர்முகபாவனையா னிருவாணமாமெனப்பட்ட திப்போது அத்துவிதியமான பிரமமே யுட்டோன்றும் பொருளனைத்துமாய் வியாபித்திருக்கின்ற தென்பதை வில்வபல திட்டாந்தத்தாற் றெரிவிப்பவராய் மற்றோர்கதையை யார

ம்பிக்கின்றார். அதிற் சித்தசமாதிநிமித்தம் பிரகார பேதத்தாற் போதிக்கின்றதற் குபக்கிரமிக்கின்றார்.

(சிலைக்கதை-அ-கை.)

முன்பு சர்வார்த்தத்தையுமுட்கொண்ட வத்துவிதியமான சைதன்னியமே வில்வபலமாக நிருபிக்கப்பட்டது. இப்போது விசித்திரமான சகச்சித்திர முடையதாயினும் சித்தகண்டேகரசமு நிருவிகற்ப கனமுடையதுமா மச்சித்தே மகாசிலையாக நிருபிக்கப் படுகின்றது. (௪)

(அருச்சுனன் கதை-அ-கை.)

முன்பு விசித்திரமாயினும் அகண்டேகரசமான சித்து சிலையாக நிருபிக்கப்பட்டது. இப்போது சர்வமும் பிரமமென்னும் விவேகிக்கு யுத்தாதியுஞ் சித்தவிசிராந்தியை வாதிக்காதெனத் தெரிவித்தற்கு அருச்சுனன்கதை வர்ணிக்கப்படுகின்றது. (௫)

(சதவுருத்திரன்கதை-அ-கை.)

முன்பு விவேகிக்கு யுத்தாதியுஞ் சித்த விசிராந்தியை வாதிக்காதென் றருச்சுனன்கதை வர்ணிக்கப்பட்ட திப்போதிந்தச் சென்ம பரம்பரை தனது சங்கற்பரூபப்பிராந்தி பரம்பரை மாத்திரத்தாற் சித்தித்ததென்று தெரிவித்தற்குத்திட்டாந்தமாகச்சதவுருத்திரன் கதை நிருபிக்கப்படுகின்றது. (௬)



(வேதாளகதை-அ-கை.)

முன்பிந்தச்சென்ம பரம்பரை தனது சங்கற்பத்துருவப் பிராந்தியாற் சித்தித்ததெனத்தெரிவித்தற்கு சதவுருத்திரன்கதை சொல்லப்பட்டதிப்போது சுழுத்தி மௌனத்தைச் சம்பாதிக்கும் விவேகத்தைச்சொல்வதற்குக் கற்கடிவினுச் சங்கம்போனீக்கற்கரிய வேதாளவினுச்சங்கநிருபிக்கப்படுகின்றது.

(பகீரதன் கதை-அ-கை.)

முன்பு சுழுத்தி மவுனத்தைச்சம்பாதிக்கும் விவேகத்தைத் தெரிவித்தற்கு வேதாள வினு நிருபிக்கப்பட்டது. இப்போது துர்லபமாயினுஞ் சித்தவிசிராந்திதனது பிரயத்தினத்தினாலே பெறப்படுமெனத் தெரிவித்தற்குப் பகீரதன் கதை சொல்லப்படுகின்றது. (௮)

(சிகித்துவசன்கதை-அ-கை.)

முன்பு துர்லபமாயினுஞ்சித்தவிசிராந்திதனது பிரயத்தினத்தினாலே பெறப்படுமெனத் தெரிவித்தற்குப்பகீரதன்கதைசொல்லப்பட்டது. இப்போது பிரதிபந்தகபாவநசியாவிடின் றுர்லபமாயினுஞ் சுவாத்மஞான மாசாரியரது பிரயத்தன அதிசயத்தினாற் பெறலாமெனத் தெரிவித்தற்கனேக கதையை யுட்கொண்ட சிகித்துவசன்கதை ஆரம்பிக்கப்படுகின்றது. (௯)

(கசன்கதை-அ-கை.)

முன் பிரதிபந்தரூபமான பாவநசியாவிடிற் றுர்லபமாயினுஞ் சுவாத்மஞான மாசாரியரது பிரயத்தனாதிசயத்தினாற் பெறலாமெனத் தெரிவித்தற்கனேக கதைகளை யுட்கொண்ட சிகித்துவசன்கதை சொல்லப்பட்ட திப்போது சித்தத்தியாகமே சர்வத்தியாகமாம் அன்னியமன்றெனக் கசன் கதையாற் சொல்லப்படுகின்றது. (க0)

(மித்தையாபுருடன்கதை-அ-கை.)

முன்பு சித்தத்தியாகமே சர்வத்தியாகம் எனப்பட்டது. இப்போது விசாரமில்லாதபோ தின்பமாமிவ்வகங்காரஞ் சம்சாரத்தில் வியர்த்தமாகவே துன்புறுமென்பதிற் றிட்டாந்தமாக மித்தையாபுருடன் விர்த்தாந்த நிரூபிக்கப்படுகின்றது. (கக)

(பிருங்கீசர்கதை-அ-கை.)

முன்பகங்காரத்திற்கே மித்தையான சோகம் எனப்பட்ட திப்போ தங்ஙனமாயின் புத்தி விசிராந்தி யெப்படியாமெனச் சங்கைவரிற் சமாதியாலன்றியும் மகா கர்த்தத்துவாதியாற் புத்திக்கு விசிராந்தி சித்திக்குமெனப்பிருங்கீசர்கதையால் நிரூபிக்கின்றார். (கஉ)

(இக்குவாகுகதை-அ-கை.)

முன்பு சமாதியாலன்றியும் மகாகர்த்தருத்துவாதியாலே சித்தவிசிராந்தி சித்திக்குமெனப்பட்டது. இப்போது தனது விசாரத்தா லறிதற்கரிதாயினுந் தத்துவங் குருவினுத்தியினா லறிதற்கெளிதாமென்று இக்குவாகு கதையாற் சொல்லப்படுகின்றது. (கங)



(மானுவேடன்கதை-அ-கை.)

முன்பு தனது விசாரத்தா லறிதற் கரிதாயினுந்தத்துவங் குருவி னுபதேசத்தினா லெளிதி லறியலாமெனத் தெரிவிக்கப்பட்டது. இப்போது தத்துவத்தை யறிந்த விசிராந்தனுக்கு மிகவும் லௌகிகமின்றெனத்திட்டாந்த முன்னிலையாகத் தெரிவித்தற்கு முனி வியாதன் விருத்தாந்த நிரூபிக்கப்படுகின்றது. (கச)

(நிருவாணப்பிரகரணம்.)

(யோகசத்தபூமிகை - அ - கை.)

முன்பு விசிராந்தனுக்குவாகியவிவகாரமின்றெனத் தெரிவிக்கப்பட்டது. இப்போது சகலமானவிந்தஞான சாத்திரத்துக்கு ஞானபூமிகையே சாரமாதலி னதன்சொருபத்தை வித்தாரமாக நிரூபித்தற்குமுடிவான விக்கதையை ஆரம்பிக்கின்றார். (கரு)

ஆகப்பிரகரணம்-கூ-க்கு, கதை-சங. ஷ விபரம், ஒன்றுக்குக்கதை-உ-ம், இரண்டுக்குக்கதை-க,ம். மூன்றுக்குக்கதை கூ-ம், நான்கிற்குக்கதை கூ-ம், ஐந்திற்குக் கதை க0-ம், ஆறுக்குக்கதை கரு-ம், ஆகியஇம்முறையாகப் பிரகரணமாறுக்குக்கதை-சங,

முமுட்சு பிரகரணத்துக்கும், வீமபாசதி:டர்கதைக்கும், திதிப்பிரகரணத்திற்கும், அவதாரிகை வியாக்கியானத்தின்று.

### இம்முறையன்றி வைராக்கியப் பிரகரணத்தில் முக்கியந் தெரியவேண்டிய அவதாரிகைகள்.

கசு-கவி. (சதுமறை நூல்களியாவும்) அ-கை. ஏககாலத்தில் வெகுவித சஞ்சலமான வால்லியமுஞ், சகல ஆசாதோடசரணியமான தாருண்யமுஞ், சார்வபௌம சம்பத்தோடு கூடிய மகாகீர்த்திப் பிரசித்தமுள்ளசந்நிதியிற்பிதாவு, மனு தினம் அனுபவித்தற்குரியசாதன சாமக்கிரியையும், நிறைந்தஸ்ரீராமற்கு வைராக்கியாதியோக்கியதை எப்படி, அனதிகாரிக்கு வசிட்டரா லுபதேசமெங்ஙனம். சீவன்முத்திப்பிராப்திதானெங்ஙன, மாமெனச்சங்கித்து, நிரந்தரவித்தியா சாமர்த்தியத்தா னித்தியாநித்தியவஸ்து விவேகமுந், தீர்த்தாடனாதியகண்ணிய புண்ணியத்தினாற் பரிசுத்தமான சித்தத்துக்குத் தோஷதரிசனத்தால் விஷயங்களில் வைராக்கியமும், வசிட்டாதி மகாரிஷிகள் பணிவிடையாற் சமதமாதிசம்பத்தியும், மோட்சவிச்சையு, முடையசாதனசதுட்டய சம்பன்னனான அதிகாரிக்குக் குருவுபதேசத்தாலுந் தனது பிரக்ஞாபலத்தினாலும் சீவன் முத்திப்பிராப்தியிற் றடையாதுளதென வபிப்பிராயங்கொண்டு கூறல்.



ரு௦-கவி. (இனமிகழுமென்றஞ்சி யித்துயருக்கழுதாற்றேன்.) என்றதற்குமேல் - அ-கை. தனம், ஆயுள், அகங்காரம், மனம், ஆசை, சரீரம், வாலியம், எவ்வனம், மாதர், சரை, காலம், ஆகிய இவ்வேகாதசத்தைச்சிந்தித்தல், இவற்றிற்றனமூலத்தினாற் சமுசாரசம்பந்தமான சர்வப்பிரயோசனமுஞ்சித்தித்தலின் முக்கியந்தனமென்று, முன், தனவிசாரம், தனமிருக்கின் வெகுகாலபோகநிமித்தஞ் சிரஞ்சீவித்துவம் அபேட்சிக்கப்படுதலின் அதன்பின், ஆயுள், ஆயுளுந் தனமுமுறின் நான் கருத்தா போக்தாவென்று வெகுவித கர்த்துருத்துவ போக்துருத்துவாதி அபிமானப்பிரவிர்த்தி வருதலின் அதன்பின், அகங்காரம், அகங்கார மிருக்கின் அதன் வசத்தால் விவிதசங்கற்ப விகற்பாத்மகமாக மனமுதித்தலின் அதன்பின், மனம், அதன்பின் நிரந்தரபோகேச்சாரூபமான, ஆசை, அதன்பின் பேரழகுடைய போகஸ்தானமான, சரீரம், அதன்பின் அதன் அவஸ்தா விசேடரூபமான, பாலியமும், அதன்பின், எவ்வனமும், அதன்பின் எவ்வனத்தின் முக்கிய போகத்துக்குரிய சர்வவிடய சமட்டிரூபமான, மாதர், அதன்பின் போகத்துக் குரித்தன்றாயினும் போகேச்சை மிகுந்த, சரை, அதன்பின் சருவசிருட்டிதிதி சங்காரநிமித்தமான, காலம். இதுவே கிரமாவிப்பிராயமென் றுணரத்தக்கது.

ஞானவாசிட்டக்கதைகளின் அவதாரிகை முற்றுப்பெற்றது.

---

உ

கணபதிதுணை.

ஹரிஓம்

ஸ்ரீகிருஷ்ணாயபரப்பிர்ம்மணே நம:

# பகவற்கீதை அத்தியாயங்களின் அவதாரிகை.

---

(முதலாவது-சோகவத்தியாயம்.)

(அ-கை) சகலலோக குருவாகிய பரமேஸ்வரன் லீலாமாத்திரத்தினாலே சகலபிரபஞ்சங்களையும் நிர்மாணஞ்செய்து அதிலே சிவரூபமாய்ப் பிரவேசித்துப்பிராமணாதிவருணங்களையும், பிரமச்சரியாதியாச்சிரமங்களையும், அவைகட்குரித்தாகிய தருமங்களையும், அத்தருமங்களைப் பிரகாசிப்பிக்கும் பொருட்டு வேதாதிகளையுங் கற்பித்தவ்வேதார்த்தமான நிவிர்த்தித் தருமத்தைச் சனகாதிகட்கும் *பிரமவிருத்தி தருமத்தை மரீசிமுதலிய மனுவாதிகட்கு முபதேசித் தந்தப் பரம்பரையா யநுட்டித்துவருகிற சிவர்களுக் கநுகூலமான பலன்களைக் கருணையினாலே கொடுத் திரட்சைசெய்து வருமிடத்திற் காலவிரோதத்தினாலே துஷ்டர்களா யுற்பவித்த செனங்களை யுபசம்மாரஞ்செய்யு நிமித்த மனேகாவதாரங்களைச் செய்து துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலன து

* பிரவிருத்தியென்று பாடமோதுவாருமுளர்.



வாரமாக வேதார்த்தமான வுபயவித தருமத்தை ஸ்தாபித்துச் சிதாகாசமான நிசசொரூபத்திற் பிரதிஷ்டிதராயுள்ள வந்தப்பரமேஸ்வரனே பிரமாதிகளினாற் பிரார்த்திக்கப்பட்டுக்கொண்டு கம்சாதிநிக்கிரகார்த்தமாக யதுகுலத்தில் வசுதேவ புத்திரனாக வவதரித்து கம்சாதிகளை வதைசெய்து சாதுக்களை யிரக்ஷித்து வேதார்த்தமான வுபயவித தர்மத்தையும் அருச்சுனனை நிமித்தீகரித்துக்கொண்டு லோகாநுக்கிரகார்த்தமாகப் போதித்த கீதாசாஸ்திரத்தை வேதவியாசரான வாசாரியர் பிரபந்தமாகச் செய்தா ரதைச் சங்கராசாரியர் முதலியபெரியோர்கள் வியாக்கியானித்தார்கள். அவைகளைக் குரோடீகரித் தெளிதிலே யெல்லோருக்கும் பயன்படும்படி சிந்துர அரணத்தில் வாசஞ்செய்யாநின்ற கிருஷ்ணயோகியென்னும் ஆசாரியரால்சுலோகபத பூருவகமாக திராவிடபாடையில் வியாக்கியானஞ்செய்யத் தொடங்குகின்றது. (க)

(இரண்டாவது சாங்கியயோக வத்தியாயம்.)

(அ-கை) சிற்சதானந் தாத்விதீயப் பிரமாத்மசொரூபராகிய பகவானானவர் மூலாக்ஞானத்தினாலே யுண்டாகிய சோகமோகமாகிறசமுத்திரத்தின் மூழ்கினவனாகிய வருச்சுனனை விவேகக்ஞானமாகிற தோணியினாற் சீவன்முத்திப்பதமென்னுங் கரை

யிற் சேர்ப்பிக்கும்பொருட்டுச் சாமானியமா யுண்
டாயிருக்கிற வைராக்கியாதி குணங்களை நிமித்தீகரி
த்துக்கொண்டு சாங்கியயோகத்தைக் கூறுகின்றார்.

(மூன்றாவது தேவபூசையத்தியாயம்.)

(அ-கை) பூருவாத்தியாயத்திற் பிரவிர்த்திநிவி
ர்த்தி யதிகாரிவிஷயமான சாங்கிய புத்தியு மியோக
புத்தியும் பகவானா லுபதேசிக்கப்பட்டனவாகிலும்
திடப்பிரக்ஞனுடையஇலட்சணோபதேசம்ஆரம்பி
துஇந்தப்பிரமநிஷ்டையில்க்ஷணமாவதுஸ்திதிபெ
ற்றவன் பிரமகைவல்யத்தை யடைவனே யன்றிச்
சம்சார மோகத்தை யடைகிறதில்லையென்று, சாங்
கியயோக புத்தியின் பலமே வெகுமான பூருவக
மாகவுபதேசிக்கப்பட்ட தாகையால் இவ்வத்தியாய
த்தைக் கருமயோகபலத்தைத் தெரிவிக்கும்பொரு
ட் டாரம்பிக்கிறார்.
(௩)

(நான்காவது சம்பிரதாயவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயத் துவயங்களி
னும்சொல்லப்பட்டதாயும் சகலவேதார்த்த சாரபூ
தங்களாயும் பிரவிர்த்தி நிவிர்த்தி யதிகாரிவிஷயங்க
ளாயு மிருக்கிறகர்மஞானயோகங்களையே விஸ்தார
மாகச் சொல்லவேண்டுமெனக் கருதி யிவ்வத்தியா
யத்திற் சம்பிரதாய பாரம்பரியக் கிரமமாக க்ஞான
யோகத்தைப் பிரசம்சாபூருவமாகக் கூறுகின்றார்.



(ஐந்தாவது ஞானகர்மவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயத்தில் ஞானக்
கினி சகலகர்மங்களையுந் தகிக்குமென்று மதுவே
முக்கியபாவனமென்று கர்மத்தியாகமுஞ் சர்வப்
பிரதிபந்தமான சமுசயத்தைவிட்டுச் சுதர்மமான
யுத்தஞ் செய்யென்று கர்மாநுஷ்டானத்தையும் ப
கவானா லுபதேசிக்கப்பட்டதைக் கேட்ட அருச்சு
னனானவன் இவ்வத்தியாயத்திற் கர்மசன்னியாச
முங் கர்மாநுஷ்டானமு மேககாலத்தில் ஒருபுருஷ
னால் அநுஷ்டிப்பது அசக்கியமெனக் கருதி யவை
யிரண்டி லொன்று யான் முக்கியமாய்ச் செய்யவே
ண்டியதை யுபதேசிக்கவேண்டுமென்ற வினாவிற்கு
அதிகாரிபேதத்தினா லிரண்டும்முக்கியமாய்ச் செய்
யவேண்டுமெனக் கூறுகின்றார். (௫)

(ஆறாவது யோகவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயத்திற் சபல
மான ஞானநிஷ்டையினையே நிரம்பவும் புகழ்ந்து
சொல்லியதற் கந்தரங்கசாதனமான தியானவைரா
க்கியாதி குணங்களையுஞ் சங்கிரகமாக வுபதேசித்
தந்தத் தியானவைராக்கியாதி குணங்களையே விஸ்
தாரமாக அநுக்கிரகஞ் செய்யும்பொருட் டிவ்வத்
தியாயங் கூறுகின்றார். (௬)

(ஏழாவது மாயாரூபஅத்தியாயம்.)

(அ·கை) பூர்வாத்தியாயத்திற் பிரத்தியக்கு
முகமான சித்தத்தினா லென்னையே சிரத்தாவானாகி

யெவன் பசிக்கிறானோ அவனே யோகிகளுக்குள்ளே சிரேஷ்டனென்று கூறிய வதனை வெளிபண்ணும் பொருட்டு வாசுதேவ தத்துவத்தையும் அவரிடத்திற் பத்திமானான புருஷனுடைய பிரகாரத்தையும் பத்தியினால் வரும் பிரயோசனத்தையும் வெளிபண்ணுவதற்காக இவ்வத்தியாயங் கூறுகின்றார். (௭)

(எட்டாவது எழுவகைவினாவுரைத்த
வத்தியாயம்.)

(அ-கை) பூர்வாத்தியாய முடிவிற் சராமரணாதி சம்சார மோட்சத்தின்பொருட் டென்னையேசரணமடைந் தெவர்கள் பசிக்கிறார்களோ அவர்களே பிரமமுதலிய ரகசியங்களை யறிவார்களென்று சொல்லிய பகவா னதபிப்பிராயமான பிரமாதித்துவங்களை நன்றாய்த் தெரிந்துகொள்ளும்பொருட் டிவ்வத்தியாயத்தி லருச்சுனன தெழுவகை வினாவை நிமித்திகரித்து உத்தரங் கூறுகின்றார். (௮)

(ஒன்பதாவது மாயாவிகார அத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய வத்தியாயத்திற் பிராணவாலம்பனமான சகுணதாரணா யோகிக்கர்ச்சராதி மார்க்கத்தினாற் காரியப்பிரம பிராப்தியுங் கற்பாந்தத்தின் முத்தியு முண்டாமென் றுபதேசித்ததினாலிஃதே மோட்சப் பிராப்திக் கிரமமென்று வருஞ் சங்கையை நிவிர்த்திப்பிக்கிறதற்காக விவ்வத்தியா



யத்தில் ஞானநிஷ்டனுக்குக் கமனா கமனாதிகளின்றென்றும் ஞானம் இம்மையிலே முத்தியேதுவென்றுங் கூறுகின்றார். (௯)

(பத்தாவது விபூதியத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய வத்தியாயங்களிற் பகவத்தத்துவமும் பகவத்பத்தி யோகமும் பகவத்விபூதிகளுஞ் சொல்லப்பட்டனவாகினும் பகவத்தத்துவந் துர்விக்ஞேயமாகையாற் பகவதுபாசனாலம்பன விசேடங்களையும் பகவத் தத்துவங்களையும் ஸ்பட்டமாகத் தெரிவிக்கும்பொருட் டிவ்வத்தியாயங் கூறுகின்றார். (௧௦)

(பதினோராவது விசுவரூபவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயத்திற் சகலவிபூதிரகசியங்களையு முபதேசித்த பகவானாலிந்தச் சகல சகத்தும் ஓரம்சத்தினால் வியாபித்துச் சகலரூபனாகவு மிருக்கிறேனென்று சொல்லப்பட்ட அர்த்தத்தைப் பிரத்தியக்ஷமாக அர்ச்சுனன்றெரிந்துகொள்ளும்பொருட் டிவ்வத்தியாயத்தில் விஸ்வரூபங் காண்பிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கவவன் பிரசின்னபூர்வகமாக விசுவரூபதெரிசனங் கொடுத்ததைக் கூறுகின்றார். (௧௧)

(பன்னிரண்டாவது பத்தியத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாய முடிவிலென் பிரீதியர்த்தமாகக் கர்மஞ்செய்கின்றவனாகவும் என்

னையே முக்கியமாக ஆசரித்தவனாகவும் யாதொரு பற்றுதலுமின்றிப் பத்தியேசெய்கிறவனாகவு மிருக்கிற புருட னென்னையே யடைவனென்பதாம் பத்திக்கே சிரேஷ்டத்துவஞ் சொல்லப்பட்டது. அந்தந்தவத்தி யாயங்களிலந்தத் தலங்களில் ஞானத்திற்குச் சமானமான பவித்திரமின்றென்றும் ஞானத்திலே சகலகர்மங்களுஞ் சமாப்தியடையுமென்றும் ஞானாக்கினியே சகலகன்மேந்தனங்களைத் தகிப்பிக்குமென்று மாத்மஞியான ஞானநிஷ்டனுக்குச் செய்யவேண்டுவதொன்று மின்றென்றும் பிரமசம்பந்தியான ஞானநிஷ்டையை யடைந்தவன்மேல் மோகத்தை யடையானென்றுங் கூறியிருப்பதால் ஞானத்திற்கே பிரதானத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறதாதலா லிப்பத்தி ஞானங்களி லத்தியந்தஞ் சிரேஷ்டமானதைத் தெரிவிக்கும்பொருட்டு அருச்சுனப் பிரசினோத்தரமாக விவ்வத்தியாயங் கூறுகின்றார். (கஉ)

(பதின்மூன்றாவது சேத்திரசேதத்திரக்ஞ அத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயமுடிவில் ராகத்துவேஷ மின்றிய குணங்களோடுங்கூடி ஞானலெட்சண பத்தியினாலென்னை யுபாசிப்பவர்களெனக்கத்தியந்தம் பிரியர்களென்றுகூறி ஏழாமத்தியாயத்திற் சூசிப்பித்த சேத்திரசேத்திரக்ஞ சத்தவா



ச்சியமான பிரகிருதித்து வயத்தை விஸ்தாரமாய்த் தெரிவிப்பதற் கிவ்வத்தியாயங் கூறுகின்றார். (கங)

(பதினான்காவது குணாதீதவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயத்திற் சிருஷ்டியாகின்ற சகலமும் பிரகிருதி புருஷசம்பந்தத்திற் றானே யுண்டாகின்றதென்று கூறியஃதைக் கிரமமாகத் தெரிவிக்கும்பொருட் டிவ்வத்தியாயத்தில் அந்தப் பிரகிருதிகுணங்களை விபாகஞ்செய்து கூறியர்ச்சுனன் பிரசின பூர்வகமாகக் குணாதீத லெட்சணமுங் கூறுகின்றார். (கச)

(பதினைந்தாவது பிரபஞ்ச அத்தியாயம்.)

(அ-கை) பூருவ அத்தியாய அந்தத்தில் விபசாரமின்றிய பத்தியோகத்தினா லென்னையே யெவர்களுபாசிக்கின்றார்களோ அவர்களே யெனது பிரசாதத்தினால் ஞானப்பிராப்திக் கிரமமாகக் குணாதீதர்களாகிக் கைவல்யத்தை யடைவார்களென்றதால் ஞானநிஷ்டர்களான பிரத்தியக்கு தெரிசிகள் மோட்சமடைவதற்குச் சந்தேகமின்றென்று கூறியம்மோட்சாந்தரங்க சாதனமான ஆத்தும தத்துவஞானத்தையு மதனந்தரங்க சாதனமான வைராக்கியத்தையும் உபதேசிப்பதற்காக இவ்வத்தியாயங் கூறுகின்றார். (கரு)

(பதினாறாவது தேவாசுர வத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாய சமாப்தியில் இக்கீதாசாத்திரார்த்த சாரத்தையறிந்தவன் ஞானவானுங் கிருத கிருத்தியனுமாவனென் றுரைத்து அந்த ஞானநிஷ்டைக்கு அதிகாரியை நிருபணஞ் செய்வதற்காக, கூ-ஆமத்தியாயத்திற் சூசிப்பித்த தேவாசுரப் பிரகிருதிகளை விஸ்தாரமாய்த் தரிசிப்பித்தற்காக விவ்வத்தியாயங் கூறுகின்றார். (கசு)

(பதினேழாவது குணவிகார வத்தியாயம்)

(அ-கை) முற்கூறிய அத்தியாய சமாப்தியிலி யாவன் சாஸ்திரவிதியைத் தவிர்ந்து சுவேச்சாசாரனாகி யிருக்கிறானோ வவன் சித்தசுத்தியையும் இகபரசௌக்கியத்தையும் உத்தமகதியையு மடையானென்றதனால் அசாத்திரமார்க்கமாகப் பிரவிர்த்திக்கின்றவனுக்கு ஞானமார்க்கத்தி லதிகாரமின்றென் றுணர்த்தலாயிற்று. ஆதலா லிவ்வத்தி யாயத்திற் சாஸ்திரவிதியறியாமலுஞ் சுவேச்சாசாரனாகாமலுஞ் சிரத்தையோடும் பிரவிர்த்திக்கும் புருஷனுக்கு மோட்சமார்க்கத்தி லதிகாரமுளதா அலது இலதாவென்னு நிர்ணயம்றிதற்காக அருச்சுனன் பிரசினத்தை நிமித்தீகரித்துத் தாங்கூறுகின்றார்.

(பதினெட்டாவது சஞ்சேபவத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய அத்தியாயங்களில் யாதொருபுருஷன் சகலகர்மங்களையு மனதினாற் சந்நியாசித்து செய்கையும் செய்விக்கையுமின்மையனுஞ் சுகியுமாயிருக்கிறானோ வவனே சந்நியாச யோகயுக்தான்மாவுஞ் சகலபந்த விநிர்முத்தனுமாகி யென்னையே யடைவனென்று சர்வகர்மசந்நியாசமுங் கர்மபலேச்சையைமாத்திரம் விடுத்தவசியங் கர்மமனுஷ்டிக்க வேண்டுமென்றும் பகவானுலுபதேசிக்கப்பட்டது சர்வக்ஞராய் பரமகாருண்ணியரான பகவான் அதிகாரிபேதத்தைக்குறித்து அநுஷ்டான சந்நியாசங்களை யுபதேசித்தாராயினும் அவைகளினது அவிரோதப்பிரகாரத்தை நன்றாய் நிர்ணயித்தற்காகவுஞ் சகலோபநிடதார்த்த தாற்பரியத்தைத் தெரிவிப்பதற்காகவு மிவ்வத்தியாயங்கூறி யிக்கீதாசாஸ்திரத்தையுஞ் சமாப்திசெய்கின்றார்.



பகவற்கீதைஅத்தியாயங்களின் அவதாரிகை
முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# பிரமகீதை அத்தியாயங்களின் அவதாரிகை.

(முதலாவது தேவர்கள் பிரமாவைத் தரிசித்து வேதார்த்தம் வினவுமத்தியாயம்.)

(அ-கை) முற்கூறிய எக்ஞவைபவ கண்டத்தின் முடிவில் உபநிஷத் பிரமாணதாற்பரிய விருத்தியாலறியத் தக்கதான பிரமாத்ம ஐக்கியத்துவ விக்ஞானத்திற்குமோட்சசாதனத்துவங்கூறப்பட்டது. இதுவும் சர்வசாகைகளின் சம்மதமென்று தெரிசிப்பித்தற்காக ஐதரேய தைத்திரியாதிசமஸ்த உபநிடதங்களின் அர்த்தங் கண்முழுவதும் பிரதிபாதியாநின்ற பிரமகீதையை உபதேசிக்கத் தொடங்கி முனிவர்கள் பிரசினஞ் செய்ததைச் சொல்லுகிறார். (க)

(இரண்டாவது ஐதரேய உபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.)

(அ-கை) சகல வேதங்களின் அர்த்தங்களைச் சொல்லத்தொடங்கி அத்துவிதிய நிர்க்குணபிரம சொரூபமான வேதார்த்தமானது அபிதாவிருத்திக்கு விஷயமல்லவென்று சொல்லுகின்றார். (உ)



(மூன்றாவது ஐதரேய உபநிடதார்த்த சேடமும் தைத்திரிய உபநிடதார்த்தமு முரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) பூருவாத்தியாயத்தில் "பரமன் செயலறியாது படைத்தானுலகெல்லா, மரனென்பவரரியென்பவ ரயனென்பவர் சிலர்" என்றசெய்யுள் முதலியவற்றால் வாதிகளின் சங்கையை நிராகரித்துச் சுருதிப்பிரசித்தமான ஆத்மா சிவசிருஷ்டாவெனப் பிரதிபாதித்து இவ்வத்தியாயத்தில் அவ்வான்மா, தான், சிருஷ்டித்ததேகங்களில் *பாதாக்கிரங்களின் வழியினால் கிரியாசத்திரூபனாகவும் பிரமாந்திரத்தின் வழியினால் ஞானசத்தி ரூபனாகவும் பிரவேசித்தானென்னுஞ் சுருதியினால் அவ்விருவர்களுள் யாவர் பிரத்தியகான்மாவென்று சுருதியிற்கேள்விவர அதற்கு எதனாற் பார்க்கின்றானோ எதனாற்கேட்கின்றானோ என்றதுமுதலான உத்தரமாகிய சுருதிகளின் அர்த்தங்களைச் சொல்லுகின்றார். (ங)

(நான்காவது கேனோப நிடதார்த்தமுரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) முந்திய அத்தியாயங்களில் ஐதரேயதைத் திரிய உபநிடதங்களின் தாற்பரியத்தைக் கூறி இந்த அத்தியாயத்தாற் பிரமதத்துவம் உபதேசத்தால் அடையத்தக்கதேயன்றித் தருக்கத்தால் அடையத்தக்கதன்றென்று சாண்பிக்கவேண்டி'

* பாதாக்கிரங்களின் வழியினாலெனறதற்குப்பொருள். காற்சட்டை விரல்களின் வழியாலென்று கொள்க.

சுருதியில் கேள்வி மறுமொழிகளாற் பிரமம் உபதேசிக்கப் படுகின்றது. அஃதெங்ஙனமெனில், எதனால் மனம், பிராணன், வாக்கு, விழி, சுரோத்திரம்,இவைகள் பிரேரிக்கப்பட்டுத்தந்தம் விடயங்களிற் செல்கின்றன என்றது கேள்வியும் அதற்கு அவ்வத்து, கண்ணுக்குக்கண், சுரோத்திரத்திற்குச் சுரோத்திரம், மனதுக்குமனம்,வாக்குக்கு வாக்கு, பிராணனுக்குப் பிராணன், என்றது மறுமொழியும் ஆகும். அவ்விரண்டின் பொருளையுங் கூறுகின்றார்.

(ஐந்தாவது சாந்தோக்கிய உபநிடதத்தி னாறுமத்தியாய வர்த்தத்தை உரைக்குமத்தியாயம்.)

(அ-கை) பூர்வம் சைமினி சாகையிலந்தர்க்கெதமான கேனோபநிடதத்திற்குப் பிரமாத்ம ஐக்கியத்துவங் காண்பிவிக்கப்பட்டது. அந்தப்படியே சாந்தோக்கிய உபநிடதத்திற்கும்பிரமாத்ம ஐக்கியத்துவத்தை இரண்டத்தியாயங்களாலுங் கூறுகின்றார். (௫)

(ஆறாவது சாந்தோக்கிய வுபநிடதத்தினேழாவதெட்டாவதத்தியாய வர்த்தத்தை யுரைக்குமத்தியாயம்.)

(அ-கை) இந்தப்பிரகாரம் தேசகாலாதியனவச்சின்னமா யத்விதியமாயுள சச்சிற்சுகரூபமே பிரமசொரூபமாக உபதேசிக்கப்பட்டது. அது,மந்



தபுத்தி யுடையர்களான வதிகாரிகளால் விரைவாகச் சாட்சாத்தா யறியக்கூடாமையி னிருதய புண்டரீக மத்தியிற் சத்தியகாமாதிகுண விசிட்டமாக, அந்தப் பரவஸ்துவினு பாசனத்தைப்பிரமசரியாதி சாதன பரனாயிருக்கிற முமூட்சு புருஷனுக்குச் சுருதியி லுபதேசிக்கப்படுகிறது. அத்தகரவித்தையை இதிற் சங்கிரகிக்கிறார். (௬)

(ஏழாவது முண்டகோபநிடதார்த்தமுரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) இந்தப்பிரகாரம் வேதத்திரய உபநிஷதங்கட்கும் பிரமாத்ம ஐக்கிய பரத்வத்தைத் தெரிசிப்பித்து அதர்வணமுண்ட கோபநிஷதத்திற்கும் அப்பாத்துவமுண்டென்பதைத் தெரிசிப்பிக்கவேண்டி அவ்வுபநிஷதத்தைச் சங்கிரகிக்கிறார்.

(எட்டாவது கைவல்லிய வுபநிடதார்த்த முரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) மேலும் கைவல்லிய வுபநிஷதத்திற்கும் பூர்வங் கூறிய பிரமாத்மைக்கிய பரத்வம் உண்டென்று தெரிசிப்பிக்கிறதற்காக அந்த உபநிஷதார்த்தத்தைச் சங்கிரகிக்கின்றார். (௮)

(ஒன்பதாவது பிரகதாரணிய வுபநிடதத்தின் மைத்திரேயப் பிராமணார்த்த முரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) இனிப் பிரகதாரணியத்திற்கும் பிரமான்ம ஐக்கிய பரத்துவத்தை அத்தியாயத்துவய

ங்களினாலும் பிரதிபாதிக்கின்றார். அதில் மைத்திரேய பிராமணத்தில் அமிர்தத்வசாதனமான அத்துவிதான்மதெரிசனமும் அதன் சாதனமான சிரவணாதிகளும் பிரதிபாதிக்கப்பட்டிருப்பதனால் சம்பூர்ணோபதேசமாதலால் அவ்வர்த்தத்தை முன்னர் சங்கிரகித்துத் தெரிசிப்பிக்கிறார். (௯)

(பத்தாவது பிரகதாரணிய வுபநிடதத்தினு-த்தங்கார்க்கியந்தரியாமிப் பிராமணங்களினர்த்தமுரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) இவ்வித அத்துவிதியாத்ம விக்ஞானம், மோட்சசாதனமெனக் கூறப்பட்டது. அவ்வாத்மா எப்படிப்பட்ட சொரூபனெனச் சங்கித்து அதனை விசேஷமாகப் பிரதிபாதித்தற்காக உஷஸ்தப் பிராமணத்தைச் சங்கிரகித்து உபதேசிக்கின்றார். (௧௦)

(பதினோராவது கடவல்லிசுவேதாசுவதர வுபநிடதங்களினர்த்தமுரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) இந்தப்பிரகாரம் பிரகதாரண்ணிய வுபநிடதத்திற்குப்பிரமாத்மைக்கியபரத்துவ முண்டென்பதைக்கூறிக்கதிசாமானியந் தெரிசிப்பித்தற்காகக் கடவல்லி யுபநிடதத்திற்கும் அப்பரத்துவமுண்டென்பதைத் தரிசிப்பிக்கவேண்டி இவ்வத்தியாய மாரம்பிக்கின்றார். (௧௧)



(பன்னிரண்டாவது முன்சொல்லிய வுபநிடதங்களினர்த்தத்தைத் தொகுத்துரைக்கு மத்தியாயம்.)

(அ-கை) இந்தப்படி ஐதரேய முதலிய சர்வ சாகைகளிலுமுள்ள உபநிஷதங்களையுங் கூறி பிரதிபத்தி சௌகரியத்தின்பொருட்டு அந்தச்சர்வ உபநிஷதங்களிலு முள்ள அர்த்தங்களைச் சங்கிரகமாகக் கூறப் பிரதிக்ஞை செய்கின்றார். (௧௨)

பிரமகீதைஅத்தியாயங்களின் அவதாரிகை

முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.

# உபநிடதமூலம்.

பாயிரம்.

மெய்யுடைய வடியார்மேல் விருப்புடையான் கருப்பூர விளக்குப்போலென், பொய்யுடைய வருள்போதப் பொருளுடையா னருளுடையான் பொறியைந்தாலு, மையுடைய மனத்தாலு மயக்குடையார் மதங்களைத்தா மதங்களாக்குங், கையுடைய முகமுடையா னகமுடையான் றனைக்கருத்தி லிருத்தல்செய்வாம். (க)

நானிவன்று னவனென்றே நவின்றறியாதேயுழன்ற நாயினேற்குத், தானமரு நிலையிதுவே தாந்தவுபசாந்தமிது தானேதானு, மோனமொழி யிதுவெனநான் மறையினுபநிடதமொழி முடிவுகாட்டு, ஞானகுரு தேசிகனை நாவகத்தும் பாவகத்துநவிற்றுவாமே. (உ)

ஓதுசுரு திகளுன்கி னுபநிடத மெண்ணான்கினுரைகடோய்ந்து, போதுமொரு வேதாந்த சொரூபானந்தப்பெயரைப்புனைந்தநூலி, னீதிபெரியோருரைப்ப வதனையன்பொன்றில்லாத நெஞ்சினுலியானுதரவு கொடுபிதற்றி யெனதறியாமையையும்வெளியாக்கினேனே. (ங)

பாயிரமுற்றிற்று.

---



## நூல்.

பொன்போலவிலங்குமனஞ் சஞ்சலத்தாற்குரங்காம்புத்தி விசாரித்தறியும் பொலிவதனாலரவாந், தன்போலவிலையெனலா லகங்காரமதமா தனைநிகராஞ்சித்தமொரு தன்மையினானாயா, மின்போலுஞ்சலனமன மசையாமனிறுத்தி விசாரிக்கும்புத்தியினை மெய்ப்பொருட்பால் விடுத்து, வன்போடுவருமகங்காரத்தினையுங் கடிந்தால் வைத்தவிடத்திருந்துசித்த மகத்துவமுந்தருமே. (க)

சத்தமுதலைந்தனையும் பொறிகளறியும் பொறிகடம்மைத் தானு, யொத்தகரணமதறியுங் கரணத்தையறியுமுயி ருயிரைத் தானு, நித்தியமா யிருந்தறியுஞ் சாட்சியகண்டாகார நீங்கிமேலா, யித்தனையும்பகுத்தறியு மறிவுவடிவாயிருப்ப தியல்பதாமே.

விடையமறிந்திடும்பொறிகள்விடையமாமோ மிக்கபொறியறிகரணம் பொறிகளாமோ, வடையவறிசீவனந்தக்கரணமாமோ வதனையறிந்திடுஞ்சாட்சிசீவனமோ, தடையறவொன்றனையறியு மொன்றுமேலாஞ் சாட்சியையொன்றாலறியத் தகுமோதானு, யிடையறவொன்றிலகுமெனி லதனைக்காண்டற் கேதுண்டாமதுவாகி யிருந்துகாணே. (ங)

மேயமனோவிருத்தி யகண்டாகார விருத்திவிவேக விருத்தியொடிவையே விருத்திகண்மூன்றாகு

மாயமனோவிருத்திவிடயாஞ்ஞானம் போக்கியவ்விடயந்தோற்றுவிக்கு மகண்டமெனும்விருத்தி,தூயசிதஞ் ஞானத்தைப் போக்கியச்சாட்சியையேதோற்றுவிக்கும் விவேகவிருத்தியு மகண்டாஞ்ஞானம், போயிடச்சீவன்சாட்சி பூரணமேதானும் போதநிலை பொருத்துமெனப் புகன்றிடுநான்மறையே.(௪)

மிக்கபராதீனர்களே யுலகமெலாமதில்விருப்புவெறுப்பற்றோர்க, டொக்கமனோவிருத்தியனுமாத்திரமாவறிவகண்டசொருபமாகு, மக்கதிகடேராதாரறிவனுவாமனோவிருத்தி யகண்டமாகத், தக்கபிராரத்தவசத்தவராகிப் பிறந்திறந்துதளர்கின்றாரே.

தோற்றுமுபரதி வைராக்கியஞான மூன்றிவைகடொழிற்பட்டாரு, ளேற்றுமுபரதியுடையார்பிரமாதிபதமடைவ ரிகலோகத்திற், போற்றும்வைராக்கியர்க்கு மப்பதமுண்டாஞானம் பொருந்தினோர்க்குச், சாற்றரியதனிமுத்தி சரீராந்தத்தெனவுரைப்பர் தகைமையோரே. (௬)

மெய்வாய்கண்ணொடுமூக்குச் செவியாலுண்பதுவிடயம் விடயமியாவு, மைவாயிலரவெனவுற்றுணர்தன்மனோ விருத்தியவை யறிவதாகிப், பொய்வாயின்செயல்களெல்லாந் தனதாய்நின்றிடல் சீவபோதம்வேறாய்த், தைவாய் வெண்பிறைபோலத்திரிபுடிக்குஞ் சமசாட்சிதானேதானும். (௭)



ஓதரியவஞ்ஞானந்தனையறியாவுணர்விதற்கோருறுதிமூல, மாதன்மனோவிருத்தியவையகற்றியொளி தனையறியுமகண்டாகாரங், காதலினாலருளியசற்குருவருளாற்பெருமகண்டாகாரமாகுஞ், சாதகமேதானாகி யிருப்பதேததுசொருப சாட்சியாமே.(௮)

விருத்தியுஞ்சீவனும் விடயத்தினைப் பார்க்கிற்பெரிதாம் விருத்தியின்ஞானம் விடயாஞ்ஞானத்தையகற்றின், விருத்தியுஞ்சீவனும் விடயாகாரமதாமதுபோல் விருத்தியுஞ்சீவனுஞ் சத்தாகாரமதாயமைந்தால், விருத்தியைச்சீவனை விடயத்தினையறியுஞ்சாட்சி வேந்தனைசையாதிருந்து மேன்மைபெறுந்திறம்போல், விருத்திவிடயஞ்சீவன் சாட்சியிவைதோன்று விபுவாவன்ஞானியென விளம்பு (௯)
முபநிடதம்.

போற்றியவிந்திரியமின்றி விடயமெலாந்தோன்றுபொறிகளைந்துங் கரணமின்றிப் பொலிவொடுதோன்றுவால், சாற்றுகரணமுஞ்சீவனின்றியக்காற்றோன்றுசாட்சியன்றிச் சீவனிலைதானுணர்வுதோன்று, தாற்றலினாலிந்தியங்கள்விடயமட்டு மறியுமவ்விரண்டுங்கரணமறிந்திடுமவைமூன்றினையுந், தேற்றமொடுசீவனறிவுறுமவை நான்கினையுந்தெளிந்தறியுஞ் சாட்சியதீதப்பொருளாமிதுவே. (௧0)

கற்பனைசெய் யவத்தைகண் மூன்றினுக்குஞ்சாட்சி கலந்தொருதன்மையினிலகுங்காட்சிகூறிற்,

சிற்பரவுஞ்சாக்கிரத்திற் சாட்சிதானே * செகசாட்சியாயிருக்குந் தியக்கமான, சொப்பனத்தின்மனோ விருத்தி தனக்கேசாட்சி சூனியமாஞ் சுழுத்தியிலஞ்ஞானமான, வற்பநெறியானந்த மதற்கேசாட்சியனேத்தினு மிவ்வாறிருந்தோர்ந் தறியுங்காணே.()

அரியவிருத்திகண்மூன்று லகலுமஞ்ஞானங்களின்னமாய்ந்துகூறிற், றெரியுமனோவிருத்தியினல் விடயாஞ்ஞா னங்களெல்லாஞ் சிதையு மேலாய்ப், பிரிவிலகண்டாகார விருத்தியிற்சாட்சியையறியாப் பெந்தநீங்கு, முரியவிவேகவிருத்தி யகண்டாகார முஞ்சடந்தங்கொன்றுமன்றே. (௧௨)

பேசரியபரத்தினிலாரோபமதாமூலப் பிரகிருதிதோன்றுமிதிற்சாத்திகமாமாயை, யீசனிதிற்றோன்றுமிரா சதமவித்தைசீவனிதிற்றோன்றுந் தாமதத்தா வரணம்விட்சேபமதாஞ்,சூசகவிட்சேபமதிற் சூக்குமபூதமதாஞ் சூக்கவுடலிருகுணத்தாற்றோன்றிடுந்தாமதத்தி, ஞசில்பஞ்சீகரணமதா யைம்பூதவடிவாயதிற்றூல சடந்தோன்று மனைத்துமிவ்வாறடங்கும். (௧௩)

பகர்வரியமுதற்பொருளின் விவர்த்தமதாமூலப்பகுதியிந்தவுலகமெய்யாப் பார்த்திடுதன் மாயை, யகமுடலென் றிருப்பதுவேயவித்தைதத்துவங்கள

* செடசாட்சி எனப் பாடமோதுவாருமுளர்.



னைத்தையுந்தானெனமறைப்பதாவரணம்விடய, சுகவிருத்திவிட்சேபமிவைகளொந்துமடைவே தொலைதல்பரிபூரணத்தாற் சோதனை * தற்பதத்தான், மிகவுணருந்தொம்பதத்தாற்றத்துவஞானத்தால் விதேகமுத்தியதனுலும் விடப்படுதல்வீடாம். (௧௪)

சோதிதானயிருந்தாற் பிரமமதாமாயையிலேதோய்ந்தாலீசன், காதலவித்தையிற்கூடிற்சீவனும் பிரமாதாகரணந்தோய்ந்தான், மேதகுமிந்தியஞ்சேர்ந்தாற் பிரமாணமறியாதவிடயத்தெய்தல், யாததுவே பிரமேயமறிவதிற்போந் தாற்பலமேழவத்தைகூடும். (௧௫)

உற்றெதிரோ காண்டல்பிரத்தியட்சமனு மானமோங்குபுகை கண்டுநெருப்புண்டெனவே யுணர்தன், மற்றுவமைமரைபசுப்போ லெனல்சத்தம்பெரியோர் வாய்ச்சொலருத்தாபத்தி மதத்தவுடலதனு, லற்றவுபவாசியொளித்துண்பானென்றுணர்தலபாவமுன்பினிடையொருகாலத்துமிலையெனறு, னற்றியவிம்மரத்தினிற்பே யுண்டெனலைதிக நாட்டுதலே சம்பவம்ப்ரமாணமெட்டாநவிலும். (௧௬)

மன்னியதோரஞ்ஞானந்தனையறியாததுமறைப்பாவரணமாகும், பன்னியவிட்சேபமென தெனலாப்தவாக்கியமேபரோட்சஞானந்,தன்னிலைதானுனதுவே யபரோட்சங்கண்டதொரு சந்தோடத்தி,

* சோதனைத்தற்பதத்தா லெனப் பாடமோதுவாருமுளர்.

னந்நிலையேதுக்கமும்போயானந்தமடைவதுமே ழ
வத்தைப் * பேராம். (௧௭)

கடவடிவுதூலசடங்கடசலமேகரணங் கடசல
த்தி லழுக்கவித்தைகடசலவான் சீவன், கடவெளி
மேல் வெளிசாட்சிசத்தா மிவ்விரண்டுங் கடசலம்
போற் றனுகரணங்கலங்கினுந்தான் கலங்காக், கட
சலம்வற் றுநிழல்போலாசையினாலவித்தை கலந்து
நின்ற திரவியெதிர் கடசலம்போ யுளதாங், கட
வெளிமேல்வெளிபோற்சற் குருவருளா னன்குங்க
ரந்துசட சாட்சிசத்தாய்க் காண்பதத்துவிதமே.()

தொம்பதத்தினுபாதிகெடச் சொரூபமதாம
துவே தொன்மையதாந்தற்பத சோதனைசெயவும்
வேண்டுங், தம்பவுடன்மூன்றினுக்குஞ் சீவனு
க்குமுதலாஞ் சாற்றுதன்மாத்திரைப்பகுதிதானுமி
ருப்பதனா, னம்பரிபூரணமறைந்து ஞானமின்றிமு
னம்போனாடுமுயி ராதலினானதனருட்படியே, யிம்
பருபாதியும்போய்நிருபாதிகமாமதனா லெப்பொரு
ளப் பொருளாகியிருப்பதுதன் னியல்பே. (௧௯)

ஈசனுக்குத்தூலவுடல்பூதபௌதிகமே யீசனு
க்குச்சூக்கவுட லிருவகைச்சூக்குமமே, யீசனுக்கு
க்காரணமாமுடன்மாயையவனே யீசனவன்சாட்
சியே பிரமமிவையைந்தா, மீசனுக்குஞ்சீவனுக்கு

* பேருமெனப்பாடமோதுவாருமுளர்.



மைக்யமெவ்வாறென்னி லீசனுடன்மூன்றனைப்பா
ர்த்திடிலிவனுக்குடலே, யீசனெனிலிவனிலையீசுர
சாட்சியென்று லிவன்சாட்சிவேறுமற் றிதுவேப
ஞ்சைக்யம். (௨௦)

தேகமேதானெனல்சீவத்தொய்த மதுபோய்த்
தெளிவுவரிலாகாயத்தின் வடிவேதானாய்ப், போக
மாந்தனுகரணம் வாயுவைப்போலியங்கப் பொருந்
துமவனேயீசனைப்போலிவுதன்னி, லேகமாயண்ட
மெலாங்கடுகளவாய்த் தோன்றுமவையகண்டாகா
ரமதுவேயீசத்தொய்த, மாகமாமகண்டாகாரமுநீ
ங்கிக் கடுகாவண்டமுந்தோன்றாதவிடத் தத்துவித
நிலையே, (௨௧)

ஐயமின்றித்தெய்வவுருத் தியானித்தாலதுவா
மருவுருவைத்தியானித்தா லட்ட மூர்த்தியுமாம்,
பொய்யவிரண்டையுந்தவிர்ந்து தானாகியிருந்தாற்
பூரணமாஞ் சிவனெதிற்பொருந்து மதுவாமான்,
மையலுறுமனம்விடயத்தாசையுற்றே யதுவாய் ம
ரணசன னமும்விளைந்தவாற தென்றேயுணர்ந்து,
மெய்யறிவேதானாகப்பாவித்தாலதுவாய் விளங்குவ
ரியாவருஞ்செனியா வீட்டையுமெய்துவரே. ()

ஏற்றமுடையிந்தியத்தின் விடயமதேயுலகமி
ந்தியங்கள் கரணத்தின்விடயங்களாகுஞ், சாற்றுகர
ணங்களுமாபாசனுக்கேவிடயஞ்சாட்சிக்கு விடயம

தாய்த் தயங்குவதாபாசன், போற்றுவிவேகக்ஞான விடயமதாஞ்சாட்சி புகன்றவிவேகமும் பிரம பூர ணத்தின்விடயந், தோற்றரியபிரமமொன்றின் விட யமன்ருதலினச் சொருப நிலையுணர்ந்ததுவாய்த் அலங்குவர்ஞானிகளே. (உ௩)

சகசமென்றும் பிராந்தியென்றுங் கன்மமென் றுமூன்ருந் தாதான்மியங்களிவை சாற்றிலகங்கார ம், புகல்சீவனெடுகலத்தல் சகசமதாம் பிரமபூரண த்திற் கலப்பதுவேபிராந்திசரீரத்தோ, டகலாதுக லப்பதுவேகன்மநானறிவேன் கர்த்தாநான்றேகம கமென்பதுதானிவைகள், பகர்செய்பிராரத்தத்தாற் றத்துவஞானத்தாற்பணிசுழுத்தி யாலகலப் படும ளவுந்தொடரும். (உச)

அன்னமயம்பிராணமயமனேமயம்விஞ் ஞான மானந்தமயமைந்தினன்னமயமாகும், பின்னுடல் கன்மேந்தியத்திற்பிராணனது கூடிற்பிராணமயம னங்கூடிற்பிறங்குமனேமயமா, நன்னிலை ஞானேந் தியமும்புத்தியுங்கூடிடில் விஞ்ஞானமயமா மவித் தை யானந்தமயமாஞ், சொன்னவைந்துந் தானெ னருதான்மியமிவ்வெல்லாந் தோய்வறநின் றெனை தெனல்காண் சுத்தவனுபவமே. (உ௫)

மொய்த்தாருஞ்சாட்சிக்குச் சரீரமானமூன்றி னுக்கு மன்னியமுமுடிவுங்கூறிற், கர்த்தாவாஞ்சா



ட்சிக்குஞானத்தாலேகாரணமாந் தேகமந்தக்கண த்தினசந், தொத்தாயகாரண தேகந்தானென்று தொலைவதன்முன்சூக்குமதேகங்கள்கோடி, யொத் தாயபிரளயத்திலொடுங்குஞ்சூக்க மொன்றெடுங் குமூனமனந்தமொடுங்குந்தூலம். (உசு)

ஆய்ந்தசுத்தத்தவியத்தமதிலவ்வியா கிருதமத னிலிர ணியகருப்பமதனில்விராட்டடக்கம், வாய்ந் தவிராட்டினில்வானம்வானில்வளிவளியின்வன்னி வன்னியதில்வன மவ்வனத்தின்மண் டானடக்கந், தோய்ந்தமண்ணிற்றூலசட மடக்கமதிற்சூக்கஞ்சூ க்குமத்திலவித்தையதிற் றேய்சீவனடக்கம், போ ந்தடங்குமதனையணு வென்பரிதி னடங்கும்பொரு ளையணுவுக்கணுவாப் புகன்றிடுநான்மறையே. ( )

அரிதான சீவனுக்குப் பஞ்சகோசமைங்குகை யா மதின்குகையாமைம்பூதந்தா, மிரியாதவிராட் டிதுமற்றிதற்குமேலா மிரணியகருப்பமதாமிதற்கு மேலாம், பெரிதா மவ்வியாகிருத மிதற்குமேலாம் பேசருமவ்வியத்தமிதிற் பெரிதாஞ்சுத்த, மூரியார் களிதனைமகத்தென்பர் மேலாமொளியை மகத்தின் மகத்தென்றுரைப்பர்மேலோர். (உஅ)

தோற்றுமசத் தறிந்தகலத் தொடர்பகனுமே தெனிலித்தூலதேக, மாற்றுதொறுந் தொழிலகனு மிந்திரியச் செயலகன்ருல்வையநீங்கு, மேற்றும

னாலயத்திலறும் விடய மவித்தைதயைநீங்கியாவு நீங்கும், போற்றுமந்தச் சீவவறிவிழந்தவிடம்புகல் பரிபூரணமதாமே. (௨௯)

மாறுதவஞ்ஞானமுழுதுமகல் வதுகூறின்வை யந்தன்னின், வேறானாற்காலகனுமுடன் மூன்றுஞ் சீவனுக்குவேறதானா, னீறுகும் பாதிதற்சாட்சி யைக் காணின் முக்காலுநீங்குந் தானாய்ப், பேறான சொரூபபரிபூரணமானான்முழுதும் பேசொணாதே.

முத்தரையும்பெத்தரையு முகக்குறியானகக்கு றியான்முழுதுந்தேரின், மெத்தனவாகியமொழியு மானந்தபரவசத்தான் மிகுந்தசோர்வுஞ், சித்தநி லைதிரியாதசெல்வமுமா யிருப்பர்நல்லோர்தீயோரெ ல்லா, மித்தகைமையோர்களையுமிகழ்ந்து புகழ்ந் தோர்க்குறவாயிருப்பர்தாமே. (௩0)

ஏற்றபிரபஞ்சமதேநித்தமென்றும்பிரமமென் பதில்லையென்றுந், தோற்றுமுடறானென்றுந் துள ங்குவதேயஞ்ஞானதுக்கமாகுஞ், சாற்றுபிரபஞ்ச மெலாமநித்தமென்றும்பிரமமதுதானேயென்றும், வேற்றுடல் வெற்றுடலென்றும் விரிந்துணரப்பெ றுமதுவேதாந்தஞானம். (௩௧)

இருளகற்றுநால்வேதத்துபநிடத மெண்ணான் கினெங்கோன்சொன்ன, பொருளதனை நெஞ்சகத் தேசௌபாக்ய குருவென்னும்பொருளினோடு, மரு ளகற்றும்படியமுத்தித்தமிழ்போலு மதனையொரு வழியெண்ணான்கா, யருளகத்திலிருந்துரைத்த வ திசயமேயதிசயமற்றறிகிலேனே. (௩௨)

உபநிடதமூலம் முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# சொரூபசாரம்.

சிற்சொரூபந்தானே செகசொரூபமானவெலாந்
தற்சொரூபசாரமாய்ச் சாற்றவே-பொற்சொரூப
மச்சுருவாம்போல வதுவதுவாய்த்தோற்றுமொரு
சொச்சொரூபந்தானே துணை. (௧)

பூதாதியைந்து பொறிபுலன்களெல்லாஞ்சித்
தேதாதியந்தமவை யெல்லாஞ்சித்-தோதரிய (சித்
கற்பனையுஞ்சித்தனைத்துங் காண்பானுங்காட்சியுஞ்
தற்பமும்வேறில்லாமை யால். (௨)

புத்திவிகற்பத்தாற் பொருந்துசக பேதமெல்லாஞ்
சத்தியம்போற்றோன்றுவதோ சாட்சியன்றோ-முத்
திமுதற், சுத்தமசுத்தஞ் சுகாசுகங்களுள்ளதில
தத்தனையுஞ்சத்தாத லால். (௩)

பார்த்ததிசையெல்லாம் பரிபூரணசொரூபந்
தீர்த்தமெல்லாமானந்த சிற்சொரூபங்-கீர்த்திக்குந்
தோத்திரங்களெல்லாஞ் சுகசொரூபநம்மையல்லா
வேற்றுருவமேதா குமே. (௪) (ல்

அய்யாசகத்தோற்ற மாதாரமெல்லாநீ
பொய்யாதுசோதியெனப் போதித்தான்-மெய்யாக
வுற்றுணரினானென்றுரையாரொருவரிலை
முற்றுணர்வாநானே முதல். (௫)

நம்மையறிவேவடிவா நாங்கண்டோநம்மையன்றி
செம்மையுலகத்திரள்காணோ-நம்மைநா
முற்றுப்பாராதிருந்தோ மல்லாலொருகால
மிற்றுப்போனோமோ வியாம். (௬)

எல்லாருநானா விருந்துரைப்பாராகிலெனை
யல்லாமலீச னளவுமிலை-சொல்லாலே
பெற்றமகன்றம்பி பிதாப்பேருரைத்தொருவற்
குற்றவுடல்வேறா குமோ. (௭)

நாமாயிருந்தோமு நாமேநாமல்லவாய்ப்
போமாறுபோகும் பொருளுநாம்-யாமத்துத்
தானேயுறங்கிச் சகத்துருவாய்த்தோற்றிவிழித்
தானேயவன்போலத் தான். (௮)

ஆகமாயாருயிரா யஞ்ஞானமாய்ஞானப்
போகமாயின்பப் பொருளாகி-யேகமாஞ்
சிற்சொரூபமாகியெல்லாச் செய்கையுமாநம்முடை
தற்சொரூப மேதானதால். (௯)

ஆனந்தமென்பா ரதீதமென்பார்நான்மறைக்குந்
தானந்தமாஞ்சர்வ சாட்சியென்பார்-ஞானநூம்



சொன்னகுறியெல்லாந் தொடராதவென்வடிவுக்
கென்னகுறிசொல்லுவேனி யான். (௧௦)

நானோவதுவோ வதுநானோநானதுவோ
ஞானோதயமோ நாதாந்தமோ-மோனமோ
சுத்தமோசூனியமோ தோற்றுஞ்சுபாவமிலை
யித்தனையுமல்லவா மே. (௧௧)

புத்தோகமுத்தோகம் பூரணானந்தோகஞ்
சத்தோகஞ்சித்தோகஞ் சாந்தோகஞ்-சுத்தோக
மாரணங்கடேடரிய வற்புதோகஞ்சகல
காரணமாஞ்சைதன்யோ கம். (௧௨)

சொல்லாச்சுவானுபவா தீதச்சுகானந்த
மெல்லாமுந்தாமா யிருந்தோமே-தொல்லைவினை
யற்றோமெனுஞ்சொலவு மற்றோமேநம்மைநாம்
பெற்றோம்பிழைத்தோம்பி ளாய். (௧௩)

சந்ததமுநீங்காத் தனியரசுபெற்றோமே
தொந்தச்சுகாசுகமுஞ் சுட்டோமே-சிந்தனையை
வாட்டியபதேகாதி வனவாசம்விட்டோமே
வீட்டிற்குடிபுகுந் தோமே. (௧௪)

நனவிற்றசேந்திரிய நாட்டியங்கள்பார்ப்போங்
கனவின்மனக்கூத்துங் காண்போ-நினைவிற்
சுழுத்தியிலேயில்லாத சூனியக்கூத்தாடி
விழுப்பொருளாய்நாமிருப் போமே. (௧௫)

நானென்றிருந்தவனார் நான்கண்டேனாகிலவ
னானென்றுருத்தரிக்க வொட்டேனே-ஞான
வடிவானநானேநான் மற்றுளநானெல்லாம்
படிவானிறந்துபிறப் பான். (௧௬)

சாயையெனவாழ்குடும்பந் தன்னைச்சுமந்தாலு
மாயையெனுமேக மறைத்தாலுந்-தூயவொளி
தானாய்விளங்கிற் சகசாட்சியாயிருக்கு
ஞானாதித்தன்றானே நாம். (௧௭)

ஏதேதுவந்தாலு மேதேதுசெய்தாலு
மேதேதிலின்புற் றிருந்தாலு-மேதேதுந்
தானாகாவண்ணந் தனியேதெரிந்திருக்கு
ஞானாகாரந்தானே நாம். (௧௮)

ஆட்டிவிட்டபம்பரம்போ லாசைமுதலிக்கரணங்
கூட்டிமுடித்தாலுங் கூடோமே-சாட்டியதிற்
சம்பந்தமற்றோமே தற்சொரூபமானோமே
யெம்பந்தம்போன வாறே. (௧௯)

அஞ்ஞானமெத்தா லழிந்ததோவாராயும்
விஞ்ஞானமெத்தால் விளைந்ததோ-மெய்ஞ்ஞானச்
செம்மையனுபூதித் தெளிவுபெற்றதெங்ஙனே
வெம்மையல்லாலேதுகண்டோமி யாம். (௨0)

மெய்யெல்லாநாமாய் விளங்கியபின்னாமான [ய்
பொய்யெல்லாமெங்கேனும் போனதோ-மெய்பொ



யிருவகைக்குநாமே யிடமானோந்தொந்தித்
திருவகைக்குமெட்டா மலே. (௨௧)

தேகிநாமென்றோமே செல்வநமதென்றோமே
போகிநாமென்றோமே பொய்யன்றோ-வாகமுத
னாமாயிருந்ததுமெய் நாமசங்கமானதுமெய்
தேமாவித்தேபோற்றி னம். (௨௨)

வாலமதியூகமதி போன்ஞானவஞ்ஞானக்
காலமுநாங்கண்டு கழித்தோமே-சீலமா
யப்போதுநம்மிலே யாரோபமானவெலா
மிப்போதுபொய்யா னவே. (௨௩)

பொய்தானேயின்பப் பொருளாய்ப்பரம்பரையின்
மெய்யாய்ச்சுகம்போல் விளைந்தக்கா-லையோநா
மெங்கேபிறந்தோ மெதைத்தெய்வமாய்த்தொழு
மெங்கேயடைந்தோ மியாம். (௨௪) (தோ

ஆராகியோவிருந்தோ மார்க்கோவீ ணுக்குழைத்
பேராயிரமாகப் பேதித்தோம்·பூரையினி [தோம்
னம்மாலேதேடரிய நம்மைநாங்கண்டோமே
யம்மாபிழைத்தோ மடா. (௨௫)

கள்ளமனத்தைக் களைத்துருகப்பெற்றோமே
யுள்ளபடிநம்மை யுணர்ந்தோமே-தெள்ளமுதச்
சச்சிதாநந்தமுநாங் தாமாயிருந்தோமே
யச்செல்லாநாமாகை யால். (௨௬)

கண்ணலாற்காட்சியுண்டோ காதலாற்கேட்பதுண்
டோ,விண்ணலாலேதும் விரிந்ததுண்டோ-வெண்
ணுங்காற், கானலாரூடிவரக் கண்டதுபோற்ருேற்
றுகினுந், தானலாதுண்டோசகம். (உஎ)

என்னைத்தவிரமற்றிங் கேதுமிலையென்னுணை (யுரு
பொன்னைத்தவிரவிலாப் பூ:-ணம்போற்-பொன்னை
வேருக்கிப்பேருரைத்த வேற்றுமைபோனம்மையு
வாருப்பகுத்துரைத்தோமால். (உஅ) (மவ்

வாக்கிற்குமெட்டா மனத்திற்குமெட்டாது னி
தேக்கிட்டாலுந்தெவிட்டாத் தெள்ளமிர்த-நாக்கி
ருறல்போலெம்மிலே யூறியூமைக்குடம்போல்
வேறறநாமாயிருந்தோமே. (உகூ)

ஏதுசிவானந்தமோ வேதுசிவாகாரமோ
வேதுசிவன்செயலோ வென்னுதே-யேதும்
பிறிவாகாவொன்ருகாப் பேதமாகாத
வறிவாநிறைவேயது. (௩௦)

தானறியுந்தத்துவங்க ளெல்லாந்தனக்கனியந்
தானதுவேயன்றென்றுதள்ளுங்கான்-ஞானமாய்த்
தள்ளுமவனுயிருக்குந் தன்னுற்ருனென்றுணர்ந்து
கொள்ளுமதுசாந்தமாகும். (௩க)

சாந்தமேதற்சாட்சி தற்சாட்சியேபிரமம்
போந்தபிரமமே பூரணமா-மாய்ந்துணர்ந்த



சுத்தபரிபூரணமே தோன்ருச்சுவானுபவஞ்
சித்தகிலேதானே சிவம். (௩உ)

சித்தம்பிறந்து செகம்பிறந்துநானெனவோர்
கத்தன்பிறந்தவழி கண்டோமே-சித்த
மடங்காமையேமாயை யம்மாயைமாய்ப்பார்
திடந்தானேசாயுச்சியம். (௩௩)

எல்லையற்றசென்ம மெடுத்தோமிறந்தோமென்
றல்லலுற்றபீதி யழிந்தோமே-தொல்லுலக
மெல்லாங்கடுவெளியா யென்வடிவாமென்றன்வடி
வல்லாதுபொய்யாதலால். (௩௪)

காலங்கருதிக் கடவுளைக்கைகூப்பிச்
சாலவிரதங்களெல்லாஞ் சாதித்தே-மேலுணர்வா
லீதெல்லாநாமென் றெண்ணியனந்தானந்த
போதநாமாகாதபோது. (௩௫)

நித்தியமாயேகமாய் நின்மலமாய்ப்பூரணமாய்ச்
சத்தியமா யானந்ததற்போத-சுத்தராய்ச்
சித்தகிலேபெற்றவராய்த் தீர்ந்தசெனனற்றவரா
யுத்தமராயுள்ளார்க் குறும். (௩௬)

வெட்டெனவும்பேசார் வெகுளார்முகங்கோணு
ரிட்டபதார்த்தம்பெரியோர்க் கேற்றுவைப்பார்-து
ட்டர்களைச்,சேராரியாவர்க்குந் தீங்குரையார்கண்சி
வந்து,பாரார்பிறவிதீர்ப் பார். (௩எ)

பொன்றும்பொருளைப் பொருளாகவும்போற்று
றொன்றுநலந்தீங் கெடுத்துரையார்-சென்றசில
காரியத்தைநோக்கிக் கழியாரிழிவுசெய்யா
ராரியரோதாமாகு வார். (௩௮)

வேதவிதியை வெறுத்துரையாருள்ளளவு
மோதலுருக லொழிந்திரார்-சாதன்
மறவார்கருத்திளகி மண்ணுலகில்வாஞ்சை
பிறவார்பிறவாத பேர். (௩௯)

சித்தசலனந் திடுக்கெனவுஞ்சற்றுமுறார்
முத்திவழிகேட்கவே மோகிப்பார்-புத்திபோய்
மாடுநம்வீடுமனை மக்கள்செல்வமாற்சரியங்
கூடியழுந்தார்பக் குவர். (௪0)

ஆர்க்குவருவிருந்தென் றுவனவும்போவனவுந்
தீர்க்கநிலையன்றித் தெளிவரோ-யேர்க்கவே
சாந்தராய்நித்தியராய்த் தத்துவபோதற்றவராய்த்
தீர்ந்தநிலைநின்றார் சிலர். (௪௧)

சங்கற்பசாலச் சகத்தோற்றரவையெல்லா
மிங்கற்பமென்னா திழிவரோ-பங்கமற
விம்மைமறுமை யிரண்டிடத்துமப்பாலுந்
தம்மையன்றிக்காணா தவர். (௪௨)

சத்தப்பிராந்தி சதசத்தாம்பிராந்தியெல்லாஞ்
சித்தப்பிராந்தியென்றே தேறுவார்-முத்தர்தா



மாரோபமாகு மவத்தைதொறுந்தோற்றியழி
யாரோபம்பொய்யாத லால். (௪௩)

தேகாலயத்திற் சிதாகாசதேவதையை
வாகாயசாந்தி மலராலே-யேகாந்த
மந்திரத்தாற்பூசைசெய்யு மாதவராயாதரித்துச்
சந்ததம்வாழ்வார்க்கார் சரி. (௪௪)

முக்கனியும்பாற்சோறு முன்பிருக்கநாயருந்திக்
கக்கியசோற்றுக்குக் கருதுவா-ரொக்கலைக்கு (ல்
மெல்லாப்பொருட்கு மிரும்பொருளியாமென்னும
வல்லார்க்கடிமைபுகு வார். (௪௫)

செம்மையறியார் செகத்தோற்றரவறியார்
தம்மையறியார்விளையுந் தாழ்வறியார்-தம்மிலே
யந்தரராய்வீணே யவமதிப்பார்நல்லோரை
யெந்தவழிபோவா ரிவர். (௪௬)

ஐங்கணையும்பூவா மருகாலளிநாணா
மென்கரும்பாம்வில்லனங்கன் வீரனும்-வன்காத
லேற்றுவனுமெல்லாம்பொய் யிப்படியேபாழுலகத்
தோற்றமெலாமெய்தானா சொல். (௪௭)

காலமோதேவதையோ கன்மமோமாமாயைச்
சீலமோவிம்மனத்தின் செய்கையோ-கோலியநல்
லுச்சாகமோநலந்தீங் குத்தரிப்பதேததிலே
யெச்சார்புமில்லா விவர்க்கு. (௪௮)

தன்னைத்தான்றேடாச் சதிகாரரோன்பிறந்தா
ரன்னத்தால்வந்தவு- லார்தாமார்-முன்னம்
விடுத்தவுடலெத்தனையோ மீண்டுமீண்டின்பா
லெடுத்வுடனூறு பிரம். (௪௯)

பொய்யாக்கப்பொய்யைப் பொருளைப்பொருளாக்க
மெய்யாக்குருவொருத்தன்வேண்டிற்றே-யையகோ
பூபாலராகிப் பொலிந்திடுசிவன்களெலா
மாபாசமொன்பதுவே யாம். (௫0)

ஒன்றிலேதோற்று முலகப்பிரதிவிம்ப [ன்றும
மொன்றுபோற்றோற்றுதவுண்மையென்றோ-வெ
பொருளாகப்பாராத புன்மையறிவோர்க்கே
மருளார் பொறிபோல வாம். (௫௧)

தன்னையறியாமற் றானேதனைத்தேட [லகிற்
லென்னபுதுமையிதையென்சொல்வேன்-மன்னுல
றண்ணீரினின்றுகொண்டு தாகந்தணியார்போ
லெண்ணீர்மற்றேதுனைப்போமி யாம். (௫௨)

சாத்திரங்கள்கத்தித் தலைவீங்குவீர்குலமுங்
கோத்திரமுங்கொண்டுவினை கூட்டுவீர்-சாத்திசரா
யும்மாலேயும்மையுணர்ந்தோயாத்தொழில்விட்டுச்
சும்மாவிருக்கொணு தோ. (௫௩)

ஆசித்துத்தெய்வத் தடையாளமுங்கொளுத்திப்
பூசித்துக்கைகூப்பிப் போற்றுவார்-நேசிக்குந்



தானேவதுவோ சதிரானதெய்வமென்ன
வூனேடுழல்வா ருரூர். (௫௪)

தேளைத்திருநாளைச் சேவிப்பார்தம்மைவிட்டங்
காளைத்தொழப்போறு ளையகோ-தேரிடையே
பார்க்கின்றதெய்வம் பரிபூரணமலவோ
யார்க்குந் தெரியாததோ. (௫௫)

மூலைக்குளேயிருந்து மூச்சடக்கிப்பேச்சடக்கிச்
சாலக்கனயோகஞ் சாதிப்பார்-மேலுணர்வு
கண்டிருக்கச்சாதனையேன் காயத்தையேவலித்திங்
குண்டிருக்க வெண்ணுகிறா ரோ. (௫௬)

கட்டப்படாமற் கரபாத்திரந்தரிப்பார்
மட்டித்தொருகோ வணராவார்-சிட்டர்போற்
றாங்காமற்றாங்குஞ் சுகமும்பெறுவாரோ
யாங்கார நீங்குவா ரானல். (௫௭)

எச்சாத்திரம்வேண்டு மெச்சாதனைவேண்டும் [ண்டி
பிச்சாட்டல்லோகெடுவாய் பேதையர்க்குப்-புச்சா
காட்டுவார்போலவந்த கற்பனையைமெய்யெனப்பா
ராட்டுவார்தம்மைக் காணார். (௫௮)

ஆண்பெண்ணலியென் றனேகவிதமாகக்
காண்பனவுமொன்றாகக் காண்பனவு-மாண்புடைய
சித்தினிடத்தோற்றமல்லா லுண்டோவிவைதெளி
ஒத்தனை சாதித்தா லுமென். [பா

எவ்வாறெவரிருந்தெ னெவ்வாறெவர்போயென்
னெவ்வாக்கூட்டிற்றனிமை யொத்ததே - யெவ்வித
நீங்குவார்நீங்கா நிலையிலனுபூதிகண்டு [மு
தூங்குவார்க்கன்றோ சுகம். (சூ0)

விண்ணுருவமீசனென்பார் வேற்றுருவஞ்சீவ
னென்பார், கண்ணுமிரவியும்போற்காணென்பார்-
திண்ணமதா,யத்துவிதமாகாதவைவிரண்டுமாகாத
சித்துருவந்தானே சிவம். (சூக)

சுத்தசடமான சுக்கிலங்கெர்ப்பீகரித்துச்
சித்தத்துவங்கலந்து சீவித்துச்-சத்தியம்போல்[ஞ்
வந்தபொழுதிதெல்லாமாயையென்றேதற்சொருப
சிந்தைசெய்வா ரன்றோ சிவம். (சூஉ)

நேற்றின்றுநாளையென நிச்சயித்திராப்பகலை
மாற்றுசுயஞ்சோதி வடிவாகி-யேற்றபடி
யென்றுமொருநாளா யிருக்குந்திருநாளைச்
சென்றுதொழுவாரோ சிவம். (சூங)

ஞானநூல்கற்றாலு நற்றுறவுபூண்டாலு
மோனசமாதி முயன்றாலுந்-தானுகி
யெல்லாக்கவலையுமற் றின்புற்றிருப்பதுவே
சொல்லாருமுத்திச் சுகம். (சூச)

மாகேள்விபெற்றாலு மாயோகமுற்றாலுந்
தேகேந்திரியந் திரிந்தாலு-மாகருணை



சொரூபசாந்தி தோன்றுதனிப் பெரும்பேறு
சோராதமுத்திச் சுகம். (சூரு)

இச்சையநிச்சை பரவிச்சையோடுழலுங்
கொச்சைப்பிராரத்வக் கூளர்காள்-பிச்சைமுத
லேற்றாரிடுவா ரிவரென்றுணர்ந்தீரேற்
காற்றாடிக்காலாக லாம். (சூசு)

என்னைநான்கண்டபடி யிப்புவியிலெல்லோருந்
தன்னையேகாணத் தகுங்காணுஞ்-சொன்னே
னொளிநாட்டமோடுமன முண்ணாட்டம்பெற்று
வெளிநாட்டமாகா விடில். (சூஎ)

கன்மந்தவருமற் காலந்தவருமற்
சென்மந்தவருமற் செய்வோற்-கன்மவிதி
செய்வான்செயலிரண்டுஞ் சித்தத்தேகண்டுதெளிந்
துய்வார்பொருளாகு வார். (சூஅ)

உள்ளபடிகண்டுகளித் துற்றுருகமாட்டாத
கள்ளரையுங்கண்டு களித்தோமே-கொள்ளையா
யிந்திரசாலக்கமல மெத்தனைபுட்பித்தாலுஞ்
சந்திரனுக்குண்டோ சலம். (சூகூ)

திங்கடர்ந்துமேன்மேற் செனித்தகருவேலடியின்
மாங்கனிவந்துற்றதொப்ப வாய்த்ததே-யாங்காணு
மெல்லாருந்தேடுபொரு ளியாமாகவேயருள
வல்லான்திருத்தாண் மலர். (எ0)

நானாயிருந்ததெங்கே நானபிமானித்ததெங்கே
வானாளமண்ணாள வாஞ்சையெங்கே-ஞானகுரு
தேசிகனாரெங்கே சிவசிவாமுத்தியெங்கே
பேசிடவாயெங்கே பிளாய். (எக)

என்னையேயல்லாமலி யான்பெற்றதேதுமிலை
யென்னையான்பெற்றிருந்த தெப்போது-மென்னைய
பந்தமிலைவீடுமிலைப் பார்க்கிலிவையாராயுஞ்(ன்றிப்
சிந்தனையுமில்லாத தே. (எஉ)

செப்படிபோற்காட்டியரு டேசிகனையோவனைத்து
மிப்படிசோதித்துணர்ந்த வென்னையோ- மைப்படி
சென்மமுடிவாகவந்த தேகாலயத்தினையோ (யஞ்
வென்மயமாய்ப்போற்றுவேனி யான். (எங)

அன்னமயகோசமா மாகமேயுள்ளளவுஞ்
சொன்னபடிகேட்கிற் சுகமடைவா-யென்னாணை
கெட்டபாழ்வாசனையைக் கிட்டாதேயாதேனு
மிட்டபடிகண்டே யிரு. (எச)

பொறிகாளெனைநெடுநாட் போற்றிவளர்த்தீரே
யறிவானந்தப்பொரு ளானேன்-பிறிவாகு
முங்களையுநானு வுணர்ந்துகொண்டேனீங்களினி
யிங்கழியாதொன்றா யிரீர். (எரு)

ஆசையேயுன்னா லலைந்துவிட்டேனென்றாலு
நீசெயுபகாரத்தி னின்றேனே-தேசிகனை



யுன்னாலடைந்தே னுனைக்கூடிமுத்தியினு
மென்னாணைநானாயி னேன். (எசு)

கோபமேயுன்னாற் குறைதீர்ந்தேனீயெழும்பித்
தாபமேசெய்யுஞ் சலிப்பாலே-யாபத்து
நீங்குமுபசாந்தியிலே நின்றேன்கனவிலுநீ
யெங்கியெழும்பாதே யிரு. (எஎ)

லோபமேயுன்னை யுறவுகொண்டேனுன்னுருவம்
பாவமேயென்பருண்மை பற்றாதார்-நீபெருக
வார்ச்சிக்கவேபடுவா ராபாவியுன்னாலே
யார்ச்சிக்கப்பட்டே னமைவு. (எஅ)

நெஞ்சகமேநானேநீ நீயேநானென்றிருந்தும்
வஞ்சகமாயுன்னை மறந்தேனே-தஞ்ச
முனக்குநானென்பதுவு முண்மையேயுண்மை
யெனக்குநீவேறா யிராய். (எகூ)

ஓடித்திரிந்தா யுழைத்தாய்பிழைத்தவழி
தேடிப்பலகலையுஞ் சிந்தித்தாய்-நாடிபொரு
சற்குருவைத்தந்தாயென் சிந்தாய்தயவுசெய்த
நிற்குதவியென்செய் தேனே. (அ௦)

உன்னுருவாய்நானிருந்த வுண்மைபோலென்மன
யென்னுருவாய்நீவந்திசைந்தாயே-செய்நன்றி[மே
பாராட்டுவாருனைப்போ லுண்டோபரமபதச்
சீராட்டின்மாறா திரு. (அக)

ஆசைவர்க்கமெல்லா மகற்றிப்பொறைமுதலாந்
தாசவர்க்கஞ்செய்யநலந் தந்தாயே-நேசத்தா
லாதிகாலந்தொடுத்தென் னன்புவிடாநெஞ்சேநன்
னீதியாலென்போல நில். (அ௨)

என்னெஞ்சமுருலவ யானுமதுபோலிருந்து
வின்னஞ்சமமாகா விட்டேனே-யென்னெஞ்ச
மென்போலசையா திருக்கவதுபோலியானும்
பொன்போலிருந்தேன் பொலிந்து. (அ௩)

ஏதுவரவேண்டு மதுவருகவென்னைவிடுத்
தேதகலவேண்டு மதுவகலக்-கோதென்று
பிச்சையுந்தள்ளேன் பிரமபதமும்வேண்டே
னெச்செயலுநானாகி னேன். (அ௪)

எங்கேநான்போற்றுவது மென்னையேதேவதையெ
றெங்கேதொழுவதுநா னென்னையே-யெங்கே [ன்
யிருந்துகிடந்தோடுவது மென்னிடத்தேநானே
யருந்துவதுங்கொள்வானு மாம். (அ௫)

தன்னிடத்திலேதோற்றித் தன்னிடத்திலேயிருந்து
தன்னிடத்தேகூடுஞ் சகத்தெல்லாந்-தன்னைவிட
வேறன்றெனக்காண்ப ரல்லாலிவ்வீடுபெற்றோர்
மாறென்றுகாண்பரோ மற்று. (அ௬)

ஏதுக்காசைப்படுவ ரேதுக்ககங்கரிப்பா
ரேதுக்குமாற்சரிய மெய்துவா-ரேதுக்குந்



தாமேசராசரமாய்த் தானுவாயேழ்புவிக்கு
மாமேருவொத்துவாழ் வார். (அ௭)

மாதிக்குமாறி மதிகருகித்தீகுளிர்ந்திவ்
வாதித்தன்றெற்குவடக் காணுலுஞ்-சோதித்து
மூன்னிலைமையாராய்ந்த முத்தரோயெஞ்ஞான்றுந்
தன்னிலைமைகுன்றா தவர். (அ௮)

பிச்சைமுதலாய்ப் பிரமபதமீருக
விச்சைவரினு மிசைந்தாலுஞ்-சொச்ச
நலங்காதார்தாமதுவாய் நாடாதார்சித்தங்
கலங்காதாரேஞானி காண். (அ௯)

வந்தித்துவைப்பார் வழிபடினும்வன்கணூர்
நிந்தித்துவைத்தாலு நெஞ்சுரூர்-சிந்தையற்று
மேகாடவிவரினும் வெய்யோனுதித்தாலு
மாகாயம்போல்வா ரவர். (௯0)

எந்தெந்தப்போக மெதிராகுமவ்வளவுச்
சந்தந்தப்போக மனுசரிப்பார்-பந்தமற்று
நீதித்தனிநிலையே நிற்பர்நிரணம்பரவு
மாதித்தன்போலே யவர். (௯௧)

சித்துருவமாகிச் செகசாட்சிதாமான
முத்தரைக்காமாதி முனியாவே-சித்தத்தி
லிங்கற்பவாசனைக ளெல்லாமெடுத்தருந்திச்
சங்கற்பமில்லாத தால். (௯௨)

எங்கும்பொதுவா யிருக்குமொருசிவன்முத்தர்
தங்குமிடந்தானே தலவாச-மங்கவர்கள்
பார்வையேதீர்த்தமவர் பாதாரவிந்தமலர்ச்
சேவையேசாயுச் சியம். (௯௩)

மெத்தென்றசொல்லும் விருப்பமற்றநோக்குமெல்
சத்தென்றநெஞ்சுந் தளர்நடையுஞ்-சித்தத் [லாஞ்
தடங்காமகிழ்வு மனவரதம்பெற்ற
திடந்தானேஞானி செயல். (௯௪)

எல்லாவிடத்து மெமைக்கண்டோமெம்மிடத்தி
லெல்லாமுங்கண்டோமென்றேகமாய்க்-கல்லாமை
கற்றவனுபூதி கைகண்டார்மற்றேது
மற்றார்சிவன்முத்த ராம். (௯௫)

தானேகனாகியுப சாந்தனாய்நின்மலனாய்
வானேமுதற்றன் வடிவாகு-ஞானி
விடுத்ததொழிலெல்லாம் விலக்காகுமன்றே
னடுத்ததொழிலாசார மாம். (௯௬)

ஞானனுசந்தான ஞானிக்குநீராட
னானுகந்தகோலஞ் சதாசார-மானமற
வாங்கிப்புசிப்பதுவே மாபூசைசஞ்சாரந்
தீங்கற்றசுத்த சமாதி. (௯௭)

அண்டமெலாந்தானா யறிவுவடிவாகக்
கண்டபரானந்தசிவா காரருக்குத்-தண்டித்துத்



தள்ளும்பொருளேது தள்ளாவிதிவழியே
கொள்ளும்பொருளேது வாகும். (௯௮)

பெற்றபேரின்பப் பெரியோர்சரித்திரத்தைக்
குற்றமெனநாடுங் கொடியோர்கள்-பற்றாருக்
கோசகாரப்புழுப்போற் கோடானகோடிசென்ம
மாசார்வொன்றே மதி. (௯௯)

நித்தநிராகார நின்மலானந்தமய
சுத்தபரிபூரண சொரூப-வத்துவித
மெல்லாமுந்தாமா யிருப்பார்கருணைபெற
வல்லாரவராகு வார். (௧௦௦)

உள்ளமற்றாருள்ளத் துபொருளற்றாருள்ளக்
கள்ளமற்றார்ஞானக் கரையற்றார்-தெள்ளமுதச்
சிற்பரமுமற்றார் சிவானுபவந்தானுமற்றார்
கற்பனையுமற்றார்கள் காண். (௧௦௧)

பருவசாரத்தாற் பலிக்குமனுபூதிச்
சொரூபசாரத்தின் சுவையை-யிருசெவியா
லுண்டிருக்கவல்லா ருலகமெல்லாந்தாமாகக்
கண்டிருக்கவல்லார்கள் காண். (௧௦௨)

சொரூபசாரம் முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சுருதிசாரமகாவாக்கியம்.

---

தேசிகன்றன்னடிவணங்கிச் சுருதிசாரத் திற
னுரைப்பாஞ் சுகர்க்குபதேசித்திடும் வாக்கியங்க,
ளாசில்பிரபஞ்சமதே பிரமோஹ மேகமேவாத்
வைதம்பிர்ம மோஹமதற்கப்பாலாய்ப், பேசிய
பாவாபாவாதீதம் பிர்மமோஹம்பேசரியசுவானுப
வாதீதம் பிர்மமோஹம், நாசமிலாதிவைநான்குவா
க்கியங்கடம்மை நாரதாதியர்நால்வர் நவின்றூர
ன்றே. (௧)

வெறும்பழுதையேபாம்பாம் விவர்த்தத்தாலு
மேவுசுகதுக்கமொன்றாய் விடலாற்பாலன், பெறு
ம்பிதாவேயென்னுமாரம்பத்தானும்பெய்தயிரும்பா
ல்தானேயென்றுபேச,லுறும்பரிணாமத்தானுமொ
க்கத்தோன்றி லொன்றுறிலொன்றொழிக்கு நித்தங்
கூடாதத்தால், தெறும்புனலேயலையாமுற்பத்தியா
லுஞ் செகம்பிர்மமோகமென்றே செப்பலாமே.()

சொரூபமொன்றே பிரமமென்ப தெவ்வாறெ
ன்னிற் சுசாதிகவிசாதிகசுகதபேதம், வருவதிலையா
னுமபாவங்களைன்கும் வந்தனவானுந்தோற்றமன



த்தாலன்றித், தருவதிலையானுமண்ணைத்தவிரப்பா
ண்டந் தானில்லையானுமத்தோற்றந்தானுங்கான,
லுருவலதுவேறுபொருளில்லையானு மொன்றலது
சகமிலையென் றுணர்த்துநாலே. (௩)

பாவாபாவாதீதம்பிர்ம்மோகமேதாற் பழுதை
யின்றிப்பாம்புவராப் பண்பினாலுந், தாவாதவனுப
வத்திலிரண்டதானுந் தன்னறிவிலுறைப்பிரண்டா
தலாலும், மூவாதுதானவனானலு மாகாமுன்ன
மிரண்டுளவானுமூன்றாய்நின்ற, தேவாகிலநிருதச
டந்துக்கநீங்காத்திறத்தானுமிரண்டறுதல்சிவமே
யான்மா. (௪)

தனித்தசுவானுபவாதீதம் பிர்ம்மோகமேதா
ற் றானவனாயிருப்பதுவுஞ் சங்கற்பத்தானு, மனித்
தமெனவிடிற்சூன்ய மாதலாலு மதுமறவாவிடினி
னைவாயழிதலானு, மினித்தநிட்டை சாதனமாயி
ருத்தலானு மேதுமற்றான்மூடமென்றேயியம்பலா
னுந், தொனித்தசுபாவமுங்கடந்த தீதந்தானேசுய
ம்பிரகாசமென்றே சொல்வர்தாமே. (௫)

சுருதிசார மகாவாக்கியம்

முற்றுப்பெற்றது.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# மகாவாக்கியம்.

## பாயிரம்.

உலகமுதற்பொருளை யும்பர்க்குணவரிதாம்பொருளை யோதியவேதாகமத்தி னுச்சியினுட்பொருளைப், பலகலையின்பொருண்முடிவின் முடிவானபொருளைப் பற்றறப்பற்றியபெரியோர் பரவியவான்பொருளை, யலைதிவலைநுரைகடலி னுதித்தொடுங்குமாபோ லகிலாண்டமுதித்தொடுங்குமதன்மூலப்பொருளை, யிலகியசற்குருவாகியானாகும்பொருளை யெங்குமாம்பரம்பொருளை யாமும்வணங்குதுமே. (௧)

இருவிழிகளுலகறிந்துந்தனையறியாததுபோலியானறியும்பொருளலதிங் கெனையறியாமையினாற், கருவிடைபுக்கின்பதுன்பக் கடலிடையேசுழன்றுகண்கலக்கப்படுவேனைக் கருணைவிழியதனா, லருவினைகளறநோக்கி யாணவமேபோக்கியகமகமென்றிருந்தவெல்லா மறிவுகொண்டேநீக்கிப், பருவமதிற்பதந்தாக்கிக் கற்பனைகளியாவும்பாழாக்கித் தானாக்கும்பரகுருவைப் பணிவாம். (௨)



முன்புசெய்ததவப்பயனான் மூதறிவின்பயனான் முன்னுரைத்தபன்னூலின் முறைதெரிந்தபயனா, லன்புசெய்து சற்குருவி னருள்படைத்த பயனாலடைந்தவர்செய் தொழில்காட்டு மறிவிலியேபோலத், தன்புதல்வர்க்கிரங்கிய தாயெனவுலகோர்க்கெல்லாஞ் சங்கரசற்குருவருள் வேதாந்தநன்னூற்பொருளை, வன்புகொடுதமிழ்போலுந் தமியேன்புன்கவியால் வகுத்துரைப்பேனெனத்துணிந்த வாய்மதர்ப்புமிதுவே. (௩)

## வேறு.

சற்குருவினருளாலுந் தவமுடிவின் பயனாலுஞ்சனனநீங்கிச், சிற்கனவாழ் வடைவதற்கே சிந்தைசெய்யுந்திறமுடைய சீலராகி, நிற்குநிலைசாதனங்க ளொருநான்குமறைநான்கு நீந்தியோக, வற்கமொடு சகலகலைகளுந்தேர்ந்து ஞானநெறி வருவராமால். (௪)

இப்படியேசாதனமு மன்புவணக்கமு ஞானத்தியல்பும்பூண்டிங், கெப்படியாகிலும் பிறவாதிறவாமுத்தி யிச்சித்தார்க்கியல்பதாகச், செப்பவல்லமகாவாக்கியத்திறமிதனை யுலகோர்க்காய்ச்செப்பினேமென், றப்படியோர்சிடனுக்குச் சங்கராசாரியரன்றறைந்ததாமால். (௫)

அத்தகைமைபெற்றமகாவாக்கியந்தா னேதெ
ளில்வேதாந்தமாகிச், சுத்தபரிபூரணமுந் தோற்று
சராசரநிலையுந் துணிந்தோர்க்கெல்லாம், பெத்தம
துநீங்குகையும் பெறும்பேறுமுரைக்கும் ரகசியப்
பேருகு, முத்தரிதற்குண்மையு மீரைந்துளதென்
றுரைப்பரதை மொழியுங்காலே. (௬)

பழமறையினந்தமகாவாக்கியங்க ளான்கதனு
ற்பத்திபேதங், குழைவுதருமகிமைபதன் பிரகாசம
ஞ்ஞானக் குடும்பநீக்கந், தழையுமதிற்கவதியதினி
ண்ணயம்பெற்றோர்கதை சாதகர்தியானம்,பிழையி
லதனுரையிவை யீரைந்துமுண்மை யிதனடைவே
பேசலுற்றும். (௭)

பாயிரம்முற்றிற்று.

---

## நூல்.

முந்தியவேதோற்பத்தி பிரக்ஞானம் பிரமமெ
னமொழியும்வாக்கியஞ், சிந்தைசெய்யுமிரண்டிலக
ம்பிரமாஸ்மியெனும் வாக்கியஞ்செப்புமூன்றில்,தந்
தொமசியெனும்வாக்கியநாலாவதய மான்மாப்பிரம
மென்ன, வந்தவிந்தவாக்கியந்தா னதர்வணத்திலு
ற்பத்தி வகுத்தவாறே. (௮)

பேதமென்பதாசானுஞ் சீடனுமுத்தரஞான
ம்பிரமமென்று, ரியாததுவேதென்றுரைத்தா னக



மென்று ரெந்தவகமென்றுன்சீடன், மாதவனின்
றேகமகஞ் சொரூபமகமிரண்டுமல மற்றுமென்று,
ரோதுவினுலிரண்டுபட்ட தென்றுனெல்லாம் பிரம
மென்றுனெங்கோன். (௯)

முக்கியமாமகிமைசொல்லின் முதன்மொழிக்
காகாமியம்போமுடிவுகாணத், தக்கவிரண்டாமொ
ழியாற் சீவாத்மாப்பிரமமதாய்த் தானுய்நிற்கு,மிக்
கருமப்படிமூன்றும் வாக்கியத்தாலென்னதியானெ
ன்றனீங்கு, நெக்குருகிநாலாம் வாக்கியத்தாற்சஞ்
சிதவினையு நீங்குந்தானே. (௧0)

தூயபிரகாசந்தான் முந்தியவாக்கியமதனூற்று
லங்குஞ்சத்தே, யாயவிரண்டாமொழியாற்சித்துத்
தான்பிரகாசமாகுமூன்றி, லேயதொருவானந்தம்பி
ரகாசநாலாம் வாக்கியத்தாலெண்ணி, னேயபரிபூ
ரணந்தான் பிரகாசமெனமறைகணிகழ்த்துமாறே.

மலமாகுமஞ்ஞான நிவர்த்திசொலு மிடத்து
முதல்வாக்கியத்தாற், கிலமாகுமாவரண மிரண்டா
ம்வாக்கியத்தால் விட்சேபம்போகு,நலமாகாவவித்
தையொடு மாயையும்போமூன்றிலப்பா னுலாஞ்
சொல்லா, லுலகானநாமரூபங்கள்போமெனப் பெ
ரியோருரைப்பர்தாமே. (௧௨)

அவதிமுதல்வாக்கியத்துக்கவத்தையொருமூ
ன்றுமறிந்தப்பானிற்றல், புவனவாதனைவரினுமிர

ண்டாற்போக்கிக் கூத்தர்போற்றானாதல், கவலையி
ன்றிமூன்றாம்வாக்கியத்தா லானந்தமெலாங்களைக
ண்டோங்கல், தவநெறியானான்கிலெல்லாம் பிரம
மென்றேயுற்றிருக்குந்தன்மைத்தாமே. (கங)

வாக்கியத்தினிண்ணயங்கள் வகுக்கின்முதற்
றரமாம் வாக்கியநாலாம் வாக்கியவல்லமையேதெ
ன்றாற், றாக்குமொழியத்துவிதமாதலினாலிரண்டா
ந்தர மூன்றாம் வாக்கியமாந் தத்வமசியெனலா,
லாக்கியமூன்றாந்தரமாமிரண்டாம்வாக்கி யந்தான
கமென்றேசீடனுரைக்கப்படிகாட்டுதலா, னோக்கி
யறியாவறிவேபிரமமென்றவதனா னுண்ணியநாலா
ந்தரமாநுவலுமுதன்மொழியே. (கச)

கோதில்கதைமுதன்மொழியாற்குச்சரிய நா
ட்டிற்கோவதைசெய் சக்கிலியன்குறைகடவிர்ந்த
டைந்தா, னீதியிரண்டாமொழியாற்கொர்ப்பணியே
குருவாய் நிசிசரன்றன்பவமகற்றிநேர்மையில்வீட
டைந்தான், சோதிசெய்மூன்றாமொழியாலஞ்ஞா
னச்சுதராற்றுன்புறுவேடுவச்சிபரசுகமடைந்தாளி
வையே, யோதியநாலாமொழியாலந்தணன்செய்வி
னையா லுதவியிலாப்புசிப் புதவியுயர்ந்தடையுங்க
தையே.
(கரு)

இந்தவகைப்படியே தியானமுதன்மொழிக்கா
மெந்தைபரகுருத்தியான மிரண்டாம்வாக்கியத்து



க், கந்தமிலாவறிவதுவேதானாகியிருந்தங் ககண்ட
மெலாம்பிறித்தறிதலனுபூதியதனாற், றந்தொமசி
யெனுமொழிக்கேதக்க தியானந்தான் றன்னறிவிற்
கண்டமுந்தானகண்டமுமாயிருத்தல், கந்தமறநா
லாம்வாக்கியத்தியான மகண்டாகாரமாயிருத்தலி
(கசு)
வைகைவல்லியத்தியானம்.

ஞானமேபிரமமென்றமுதன்மொழியின் பய
ன்கேனாச்செவி கண்மெய்மூக்குநயந்தபொறியத
னா,லானசுவையோசையொளிபரிசம்வாசனை யால
றிவதுவேஞானமதின்பிரகாசமுரைக்கில், வானிர
விதிங்களங்கிபிரகாசமதிலு மலர்விழிகள்பிரகாசம
னமதிற்பிரகாசங், தானமுறுசீவனதிற்பிரகாசமதிலு
ந்தன்னறிவே பிரகாசத்தானமெனவறியே. (கஎ)

அவ்வறிவை யறிவிக்கும் வகையுரைக்கி லுட
லே யறிவாகுமெனிற் பொறிகளைந்துமிலாதறியாக்,
கவ்வியவிந்திரியந்தானறிவென்றாலந்தக் கரணமி
லாதறியாதுகரணமறிவென்றா, லெவ்விடயந்தான
றிந்துந்தனையறியாததனை யெழிற்சீவனாட்டுவிக்கு
ஞ்சீவனறிவென்றால், வவ்வியதானல்லாதவெல்லா
ந்தானென்றேமயங்குமதைப் பகுத்தறியவந்தவறி
(கஅ)
வறிவே.

இந்நிலையேஞானமென்ற பதத்தினுண்மையு
ரைத்தோ மினிப்பிரமமென்றபதத்திலக்கணங்கே

ண்மாணு, மன்னுபிரமாதிபல வுயிர்களுக்குமுயிரா
ய், மற்றதனைப்படைத்தளித்து மாற்றுதற்கேதுவு
மாய்த், துன்னுபரிபூரணமாயிருப்பதெதுவதுவாந்
தூயபதமிரண்டினுக்குஞ் சோதியொன்றாகையினு,
னன்னிலையேநமதிடத்தி லறிவுமது வெனலால்ஞா
னமேபிரமமெனநவின்றதுவாக்கியமே. (௧௯)

வேறு.

அகம்பிரமாஸ்மியென்றேயறைந்திடும்வாக்கிய
ந்தான், பகும்பதமூன்றதாகும் பன்னிபவகமேதெ
ன்னிற், சகம்பரிபூரணத்தாற் ருன்பரமார்த்தமாகி,
யுகந்தொறுமழியாதாகியொன்றொடுந்தாக்காதாகி.
அனைத்தையுங்கடந்ததாகி யனுபவித்தறிவ
தாகி, நினைத்ததேகத்தினுள்ளே நிச்சயப்படுவதா
கி, வினைத்தரூக்குமதேகத்தை விளக்குவதாகித்
தானே, தனக்கிணையென்னலாகுஞ் சைதன்னியம
கந்தானென்பார். (௨௧)

இன்னவைபறியுமாறு வியம்புதுமஞ்ஞானத்
தான், முன்னகமென்றவன்னை முடித்ததேயகமா
ங்கண்டா, யென்னனைமனையென்பாய் போலென்னு
டலென்றுகாணி, லன்னதேகத்தைவேறா யறிந்தி
ந்திரியந்தானும். (௨௨)

இந்தியமகமென்றாலு மென்கண்ணென்காலென்
கையென், றந்துமுட்கரணநீயாயுன்மனமென்கை



யாலே, யந்தவுட்கரணந்தானு மகற்றியசீவனீயாய்
ச், சந்ததமென்சிவன்றானென் கையாற்சாட்சியா
வாய். (௨௩)

அப்படியெல்லாநீக்கியறிவதேயகமாங்கண்டா
ய், செப்பியபிரமமென்னச் செறிபதந்தானேதானு,
யொப்புயர்வற்றுவேறா ருபாதியற்றகண்டரூபந்,
தப்பிலாப்பூரணத்தாற் சச்சிதானந்தமாமே. (௨௪)

இவையதுவஸ்மியென்னு மீறுளபதார்த்தஞ்
சொல்லிற், சுவைதருமயிக்கியமாகித் துவிதத்திலு
பாதியற்றுப், பவமகற்றறிவானந்தப் பரங்கடலாகு
மென்றே, தவவடிவானஞானத் தலைவர்களுரைப்ப
ர்தாமே. (௨௫)

வேறு.

தத்வமசிவாக்கியந்தான் பதமூன்றமதிலேத
த்பதத்தின்பொருளுரைப்பாஞ் சமைத்தவொருக
டந்தா, னித்தகைமை பெறுமுன்னங்கொருவடி
வங்கதுபோலிருப்பனவும் வேற்றுமையாயிருப்பன
வுமன்றிச், சத்தாகித்தமதாகிப்பெயர்தானுமின்றித்
தானேதானாயிருந்த சைதன்னியம்போல, வத்த
கைமையெப்பொழுதும் பெற்றிருக்குஞ் சத்தாயநி
ர்வசனமாய் விளங்குமதுபிரமமாமே. (௨௬)

இன்னமுந்தத் பதம்விளங்கு மேதுவெலாமு
ரைப்பே மிப்பதத்தின்பொருளது தொம்மென்றிய

ம்பல்சீவ, னன்னபதமிரண்டினுக்கும யிக்கியமசி
யென்பரவைகளுபாதியினிற்பிறிந்தயிக்கமும்பெற்
றதுகேள், துன்னுசகதீசனுக்குச் சகலபிராணிகட
ன்றூலமேதூலமவர் சூக்குமமேசூக்க, மின்னிம
றைந்திடுமாயைகாரணமாமிதனைவேறுக்கித்தானுக
விளங்கியதுபிரமம்.
(உஎ)

சீவவுபாதியையுரைக்கிற் றன்னளவேதூலஞ்
சிலகருவிசூக்குமமாங் காரணமஞ்ஞானந், தாவுமி
தனபிமானி சீவனிவையணுகாச்சாட்சியது தொம்
மென்றேசாற்றியகூடத்தர், காவலவன்சீவனெனு
முபாதியெலா நீங்கிக்கலப்பதுவே யசிபதமாய்க்கா
ட்டுமெதுநீங்கும், பாவனையுமயிக்கியமாம் பண்பும்
விதிவழியே பகுத்துரைப்பர் பெரியோர்கள் பக்கு
வரானவர்க்கே.
(உஅ)

நீயென்னுமுபாதிக்குத் தூலமுஞ் சூக்குமமு
நிருவகிப்ப தீசனென்று நிச்சயிக்கும் பொழுதே,
போயதுவஞ்ஞானமென்றும் பொருளதுநீயென்று
ம் புகல்வரந்தவீசனுக்குப் பொருந்துமுபாதிகளு,
மாயையெனுங்காரணத்தை மித்தையென் றேயறிந்
தான் மற்றவிரண்டுடலும்போய் வகுத்ததொழி
லிலனுய்த், தூயபிரமம்மென்றேசொல்லிறந்தததது
வாஞ்சுத்தமிதிற்சீவபரஞ்சோதியுஞ்சோதியுமே.()



இவையுணருமிடத்த யிக்கியமூன்றுவிதமுரை
ப்பரோதென்றூலவ்வறிவே பூரணமாயிருத்த, லவ
யவமாங் கடமடவு பாதிகளைநீக்கி யாகாயமென
வறிதலப்பொருளைத்தானே, சுவைபடவே தியானி
த்தலிவைமூன்றுவித மாந்துவந்துவங்கள்பலவு ம
றுச்சுயம்பி ரகாசமதாய், நவையிறந்துசொல்லி
றந்துநானுமிறந்திறவா ஞானமிறந்திரகசியமாய
(௩0)
நவின்றதத்துவிதமே.

அயமான்மாப்பிரமமெனவுரைத்தமொழிப்பத
மூன்றிலயமேதென்னிற், சுயமாகவிளங்குகையால
பரோக்ஷமாயிருத்தல் சுபாவமாகும், பயனுனதேத
திலேயெவ்வுலகுமுதித்தொடுங்கும் பரமேதந்த, வி
யனுனவான்மாவேபிரமமென்றததன்பயன்றுன்வி
(௩க)
ளைந்தவாறே.

இனியாத்மா வெனும்பதத்தி னியல்பகங்காரா
தியுடலீறுயுள்ள, துனியானகாரணகாரியத்தொட
ர்பா யதைவிளக்குஞ் சோதியாகித், தனியாகியறி
வறியா மையிலறியாவறிவாகித் தானேதானுங், கனி
(௩உ)
வாய பிரமமெங்கு மதிட்டானபூரணமாங் கருதுங்
காலே.

ஆகையினலயமாத்மா வெனும்பதத்தால் விள
ங்கியசீவாத்மாவுக்கு, மேகீகப்பிரமமென மொழிப

தத்தாம்பரமாத்மாவினுக்கயிக்கிய, மோகவிபரீதம றநாலுவாக்கியத்தாலுமொழிந்தாரேனும், போகபூரணசொருபஞானமன்றித்தோன்றுதப்பொலிவுஞ் சொல்வாம். (௬௫)

பேசியசொருபத்தியல்கேள்சத்தியக் ஞானனந்தப்பிரமமென்று, மாசகலுமானந்தோப் பிரமமென்று மிரண்டுமொழியதின்முன்னேது, நாசமிலாச் சத்தியாதிபதங்களினுற் பிரமமதைநாமரூப, லேசமறச்சத்தியக்ஞானனந்தப் பிரமமென்றே யியம்பலாமே. (௬௪)

ஆனந்தோப்பிரமமெனு மிரண்டாம்வாக்கியத்திலகண்டாகார, வானந்தம்பிரமமாந் துன்பறியாவின்பமாமாதலாலே, யானந்தமானந்தியெனும் வடிவ மிரண்டுமறவளவில்லாத, வானந்தஞ்சிவனிடத்தாதலால்வாக்கியத்தினயிக்கியங்கூடும். (௬௫)

அத்துவிதமிப்படியேகூடுதற்குவாக்கியத்தினடைவேயாசான், பத்திகொடுவீடுபெறுஞ்சிடனுக்குச்சொல்பிரதிபத்திவாக்கிய, நித்தசுத்தபுத்தமுத்த சத்தியபரமானந்தாத்துவிதநீங்கா, வொத்தபிரமம்மகமஸ்மியென்பரதன்பொருளுமுணாத்துமியாமே.

எந்தைமொழிந்ததுமஞ்ஞானமு மஞ்ஞானத்தினுளவியல்புதானு, முந்தைபரமார்த்தமாயில்லை



நமக்கதனுலே முடிவாய்நின்ரே, மிந்தவகையவயங்கணமதன்று நமதுருவிங்கேதென்ருேதி, லந்தவிந்தவாக்கியத்தி லுற்றகுணமுடையதே ததுவேதாமால். (௬எ)

இக்குணங்க ளுடைப்பரப் பிரமமேநாமானேமெவ்வாறென்று, னெக்ககக ணுதியெனச்சனிப்புமரிப்பின்மையினு னித்தியமானேந், தொக்குடலம் போன்மலத்தின் றுவக்கற்றுநின்றமையாற்சுத்தமானே, மக்கரணம்போனசிக்குமறிவுபெருமையிற் புத்தமானேநாமே. (௬அ)

அகங்கார விருத்தியெனப் பந்தமிலாமையின் முத்தமானேமிந்தச், சகம்போலவிளக்குமிந்திரசாலமிலாதிருக்கையினுற்சத்தியமானேஞ், சுகங்காணிற்றன்னையல்லாற் சுகமில்லையென்றேபரமா னந்தமாகு, மிகுங்காலதேசவஸ்து வெனப்பிரியா வானந்தவேடமானேம். (௬௯)

தோற்றியவான் பொருள்களெல்லாந் தானகத்தோற்றலினத்துவிதமானே, மாற்றலுடையார்களிவ்வாறகண்டமுந்தா மல்லாவானந்தமாதல், போற்றுபிரமச்சொருப சமாதியென்பரதைச்சுருதி புகலும்வாக்கிய, மேற்றிலகம்பிரமேவாவஸ்மியெனு மிதனையினியியம்பக்கேண்மோ. (எ0)

இந்தமொழிவழிகேட்டல் சிந்தித்தறெளிதனி
ட்டையின்பங்கூடல், சந்ததந்தானுயிருத்தலேந்தின்
முதற்கேள்வியென்ப தாசான்வார்த்தை, யந்தவச
னார்த்தமனத்தாராய்வே சிந்தித்த லருத்தமியாவுந்,
தொந்தமறப்பகுத்துணர்ந்து தெளிவதுவேதெளி
வெனவுஞ்சொல்வர்தாமே. (சுக)

நேராகத்தோற்றுகின்ற துவிதமறந்தொழியா
தநிட்டைகூட, லாராலுமறியவொணா வத்துவிதமு
ங்கடந்தங்கப்பாலேதுஞ், சாராதசொச்சொருபமா
த்திரமா யிருத்தலது சாட்சாத்காரந், தூராதிதூர
மெனநான்மறையின்முடிவுரைக்குந் தொன்மையா
மே. (சுஉ)

வேறு.

சங்கற்பம்விகற்பநிர்விகற்பமேசாற்றுங்காலை
சங்கற்பந்தனின்மூன்றுதகுவிகற்பத்தின்மூன்று
சங்கற்பமாதிநிர்விகற்பத்தின்மூன்றுந்தேரிற்
சங்கற்பம்விகற்பநிர்விகற்பமாஞ்சாட்சாத்காரம். ()

சங்கற்பந்தனிற்சங்கற்பந்தான்கிரியாதிகாடல்
சங்கற்பந்தனில்விகற்பந்தான்றுறவதனில்மூழ்கல்
சங்கற்பநிருவிகற்பந்தானேதானென்றுபேசல்
சங்கற்பமாதிமூன்றுந்தவிர்தலேவிகற்பந்தானும். ()



விகற்பத்திற்சங்கற்பந்தான்மிகுந்துறவாகிநிற்றல்
விகற்பத்தில்விகற்பமந்தவிரத்தியிற்பற்றிலாமை
விகற்பத்தினிருவிகற்பமெய்யுணர்வெங்குமாதல் [ம்
விகற்பத்தின்மூன்றுந்தேர்ந்து விடுதலேநிருவிகற்ப

நிருவிகற்பத்தில்சங்கற்பநித்தியானந்தமாதல்
நிருவிகற்பத்தில்விகற்பம்நிரானந்தமாகிநிற்றல்
நிருவிகற்பத்தினிருவிகற்பமேநிற்குநேர்மை
நிருவிகற்பத்தின்மூன்றுநீங்கலேநிராமயந்தான். ()

வேறு.

இப்படியேபெரியோர்க ளிருக்குமிடத்தஞ்ஞா
னிக்கின்பமான, மெய்ப்பரிசைமறந்து மொன்றை
விரும்புதல்போலிவனிதயம் விரிகின்றாலுந், தப்ப
றவேசைதன்னியத் துவக்கானபொருளனுசந்தான
த்தோடுஞ், செப்புமதன்வழித்தான காரியத்தும்
விரிதன்மிகத் தெளிவென்பாரால். (சுஎ)

தேகாதிகாரியங்க ளெல்லாந்தானல்லாத சிற்
சொருப, மாகாயமிருக்கையிலே கூடுமோவிடயமெ
லாமாளிற்றேக, மாகாயமாய்விடுமே யென்பாயே
லஞ்ஞானிக் கமலவாய்மை, யேகானுபூதிசொன்ன
லேறுதேதன்விடையத் திச்சைபோலும். (சுஅ)

பெரியோருந்தாமிருக்குந் தன்மையிலேகாக்கி
ரமாய்ப் பேதாபேதத், துரியோனாக்கலவாம லொ
ருவிடயந்தனிலுமன துறவாகாமற், பரிவோடுகொ

டுத்தாலுமருந்துபோலருந்துவரப்பான்மையாலே, யெரியோடுகலந்தபஞ்சாம் விடயமெலாமவர்மலம ற்றிருப்பர்தாமே. (சகூ)

அப்படியாகினு மனல்போ லேதேனுமருந்து வொன்றறைதல்வேண்டாந், தப்பறவேயஞ்ஞானி போற்புசிப்பனெனவுரைத்த தகைமையாலே,யொ ப்புரைத்ததல்லாதிங் குலகிசழப்புசியான்மற் றுண் டானேனு, மெய்ப்பரிசையுணர்ந்தாரை யிகழ்ந்தா ர்க்கு நரகமென்றுவிளம்புவாரோ. (ரு0)

அற்றைதொறுமாயிரமாயிரம் பிழைகள்செய் தாலு மடியேன்றன்பாற், பெற்றதிருவருட்கடலி ற் குளிப்பாட்டித் தாண்மலரும் பேறுய்ச்சூட்டிச், சொற்றதெலாந் தோத்திரமாய்ப் புனைந்தருளியெ னைவளர்க்குந் தொட்டிலாகி, யுற்றகுருராயனெங்க ள்விநாயகபாரதிதமியே னுள்ளத்தானே. (ருக)

மகாவாக்கியம் முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# ரிபுகீதையிலுள்ளமனனயுத்தி.

---

ஆனைமுக னாறுமுக னருளாந்தேவி யனந்தக ணமளவற்ற முனிவர்தேவ, ரேனையுளநல்லன்பரி யாவராலுமெய்ப்பயனும்பெறவேண்டியிதயத்தின்க, ஞானமற வுபாசிக்கப்பட்டன்னோர்க்கிங்குவந்தபய னருள்கருணாமூர்த்தியாகி, வானமென வகண்டசி தாகாயமான வத்துவதாம்பரசிவனை வணங்கல்செ ய்வாம். (க)

திரிசியமாய்ச்சிதைகின்றவுடனானல்ல தியங்கி யிடும்பௌதிகமாம்பொறிநானல்ல, பிரிவுபெறுநா னாவாமுயிர்நானல்ல பிறந்துநசிக்கின்ற மனமுத னானல்ல, விருள்வடிவாமஞ்ஞானவுருநானல்ல வி வையாவு மொருமித்ததிரணானல்ல, நிருமலமாயா வையுமே நிகழ்த்தாநின்றநீக்கமிலாச் சின்மாத்ர சொரூபமேநான். (உ)

தூலவுடல்சூக்குமதேகத்திலில்லை தூலவுடல் சூக்கவுடலிவ்விரண்டு, மாலயமாங்காரணதேகத்தி லில்லை யவைமூன்றுந்துரியத்தி லிலவேயில்லை,கோ லமூறுந்தேகமெலா மிலாததாலுங் கூறுபடாச்சின் மாத்ர சொரூபமொன்றே, காலமொருமூன்றிலு

மேயிருப்பதாலுங் களங்கமிலாச்சின்மாத்ர சொருபமேநான், (௩)

கனவினிடை நனவில்லையிவ்விரண்டுங் காரணமாஞ்சுழுத்திதனிலில்லையந்த, நனவுகனுச்சுழுத்திகளுந்துரியத்தில்லை நாலுவிதவவத்தைகளுஞ் சுத்தத்தில்லை, சொனவிதமாயவத்தையெலாமிலாததாலுஞ் சுத்தமதாஞ் சின்மாத்ர சொருபமொன்றே, யனவரதமழியாமலிருப்பதாலு மத்துவிதசின்மாத்ரசொருபமேநான். (௪)

தேகமுதற்சடமான விவையனைத்துந் திரிசியமாய்க்கடமெனவே நசிப்பதாலு, மேகபரசின்மாத்ரவடிவாமான்மா வெப்போதுந்திருக்குருவாயிருப்பதாலும், பாகமுறுந்தேகாதிமித்தையாகும்பகுப்பற்றவான்மாவே யுண்மையாகு, மாகையினுற்றேகாதித்திரனல்ல வனுசூதவறிவான வான்மாவே நான் (௫)

சத்தியஞானனந்தசுபாவமான சகலவதிட்டானபரப்பிரமத்தின்கட், சித்திரவ நிருதசட துக்கமானசெகத்தெல்லாங் கற்பிதமாய்த் தோற்றலாலே, யித்துவிதசெகத்தெல்லாமாயுங்காலை யிலகுமதிட்டானபரப் பிரமமேயாஞ், சுத்திகையிற்கற்பிதமாத் தோற்றும்வெள்ளி சோதிக்கிலதிட்டான சுத்திதானே. (௬)

இருமையெனத்தோற்றிய விச்செகத்தனைத்துமிருக்கின்றதிலங்குகின்ற தின்பமென்ன, மருவியவிவ்வனுபூதியாயுங்காலை மன்னுமதிட்டானத்தின் சுபாவமேயாஞ், சருவவதிட்டான பரப்பிரமத்துக்கே சத்தியஞானனந்தத் தன்மையன்றி, யொருபொழுதுமில்லாத வெறும்பொய்யான வுலகத்துக்கோதியவித்தன்மையுண்டோ. (௭)

காலமொருமூன்றிலுமே யிருக்கையாலுங் கற்பிதமாமியாவையுமேவிளக்கலாலுஞ், சாலவுமேயாவையினுமினிமையாலுஞ் சத்தியஞானனந்த சொரூபநானே, யாலயமாமென்னிடையிற்கனவேபோலவகிலமுமே கற்பிதமாய்த்தோற்றலாலே, கோலமுறத்தோற்றியிடுந் தோற்றமெல்லாங் குறைவற்றவதிட்டானவடிவாநானே. (௮)

என்னிடையிற்கற்பிதமாய்க் கனவின்கண்ணேயிலங்கியதாமியாவையுமே யாயுங்காலை, மன்னுமதிட்டானமதா நானேயன்றி மற்றெவையுமெனக்கயலாயிலாததேபோற், பின்னமிலாவென்னிடையினனவின்கண்ணே பிறங்கியதாமியாவையுமே யாயுங்காலை, யன்னவதிட்டானமதாநானேயன்றி யற்பமுமேயெனக்கயலா யிலவேயில்லை, (௯)

ஓதியவாறுண்மையினை யோருங்காலை யுபாதியிலாவெனதுநிச சொருபத்துக்கும், பேதமிலாப்பரப்பிரம சொரூபத்துக்கும் பேசுமிலக்கணமொன்றாயிருப்பதாலே, யாதியிலாவகண்டபர வடிவேநானென்றனவரதமாய் வதுவேமனனயுத்தி, மாதவனேயிவ்விதமாய் மயக்கந்திர மனனத்தின்சாதகமாம் யுத்திசொன்னேம். (௧௰)

மனனயுத்திமுற்றுப்பெற்றது.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## முத்திகண்டத்திலுள்ளசொரூபநாமம்.

---

பரமகதிபரகாஷ்டை பரமாந்தத்வம் பரபாரம்பரமான்மா புருடன்பூன்றன், பரமசிவன்சம்பு மகாதேவன்றாணு பரமேசன்பசுபதிநற்புராணனீசன், பரமனயனரியுருத்திரன் மகேசன்மற்றும்பரவு சதாசிவன்சோதி பரமாகாசன், பரவுமகாதாரன்மகாவியாத னத்தாபதிவிசுவாதிகனங்கிபூதபாலன்()

ஈசுவரனீசானன்பத்தாவத்தா விலகுமகாரிஷி தேவனின்றோன்விண்டு, நாசமிலான்ப்ரவுவானேன்பிராணன்பூமா நண்ணுபுமானரனந்தரியாமியான்மா, சாசுவதன்சங்கமிலான் றெந்தமில்லான் சனாதனனக்கரமானேன்றகராகாசன், பேசுபுராதனனானேன்சாட்சாத்தாகப் பிறங்குமபரோட்சமதுபிரத்தியகான்மா. (உ)

(பரமகதி-பரகாஷ்டை.)

பரமகதிமுதலான நாமார்த்தத்தைப் பாவனமா முனிவரரோபகரக்கேண்மின், பரமசிவன்சொற்காதிகதிகட்கெல்லாம் பரமானமோட்சகதி யாவதா



லே, பரசிவனேபரமகதி யன்றேன்றனே பரவுபுலன்பொறிமனது பரவும்புந்தி, பரவுமகதத்துவமஞ்ஞானத்துக்கும் பரமானமுடிவதனாற் பரமாங்காஷ்டை. (ங)

(பாதத்துவம்-பராபாரம் பரமான்மா.)

அகல்ககனமுதலான வபரதத்வமனைத்தினுக்குமுயர்தத்வமாவதாலே, நிகழ்சிவனேபரதத்வம் பவமாஞ்சிந்து நீக்கியவர்க்கோர்கரையாயிருப்பதாலே, புகல்சிவனேபரபாரமற்றுமாக்கை பொறிமனதுபுந்திமகதத்துவாதி, அகிலமதின்மேலான வான்மருப மாவதனாற்பரசிவனே பரமான்மாவாம். (ச)

(புருடன்-பூன்றன்-பரமசிவன்-சம்பு.)

புரமதெனுஞ்சரீரங்கடோறுமீசன் பூரணமாயிருப்பதனாற்புருடனுவன், பரசிவனேகாலமுதன்மூன்றாய்ச்சொன்ன பரிச்சேதமற்றதனாற்பூன்றனுவன், மருவுசிவமெனுமின்ப மெவைக்குமேலாய் மகத்தானவின்புருவா யிருப்பதாலே, பரமசிவனெனலாவன் சுகத்துக்கெல்லாம் பற்றிடமாயிருப்பதனாற்சம்புவாவன். (ச)

(மகாதேவன்-தாணு-பரமேசன்.)

தேவதைகளெல்லோர்க்குமிகவுமேலாய்த்திகழ்ந்துநிறைந்திருக்கின்ற தன்மையாலுஞ், சிவன்முதலனைத்துருவா யிருப்பதாலுஞ் சின்னமிலாம

காதேவனென்னலாவன், மேவியவோர்தாருவென வெக்காலத்து மிகவசைவற்றிருப்பதனுற் முணுவாவ, னீவனெலாவீசர்க்குமீசனுக விருப்பதனுற் பரமேசனுவனன்றே. (சு)

(பசுபதி-புராணன்-ஈசன்-பரமன்.)

பாசமுறும்பசுக்கட்குப்பதியேயான பான்மையினுற் பசுபதியென்றுரைக்கலாவ, னீசனெலாக்காலத்தும்புதுமையாக விருப்பதனுற்புராணனெனப் புகலலாவன், மாசிலதாமைசுவரியமனைத்துமென்று மருவினதாலீசனென விசைக்கலாவன், சாசுவதப்பரப்பிரமசொரூபமாகச் சந்ததமுமிருப்பதனுற் பரமனுவன். (எ)

(அயன்-அரி-உருத்திரன்-மகேசன்
சதாசிவன்-சிற்சோதி.)

ஏகமதாம்பரசிவனே விவகாரத்தி லெய்தியவைந்துருவாக விலங்குவோனு, யாகிவெகுசராசரமாஞ்சகத்தையெல்லா மாக்கியளித்தழித்தொளித்துவருள்வதாலே, யாகுமயனரியுருத்திரன் மகேசன்மற்று மருளுசதாசிவனுவன்சூரியாதி, சேகரமாஞ்சோதியெலாம் விளக்குவிக்குஞ் சிற்சோதியாவதனுற்சோதியாவன். (அ)

(பரமாகாசன்-மகாதாரன்.)

அகலுமனவாகாசம்பூதாகாச மவ்வியத்தவாகாசமனைத்திறுக்கும், பகருசிதாகாசமதாம்பரமன்



ருனே பரமானவாகாசமாவதாலே, நிகரிலதாம்பரசிவனேபரமாகாச னித்தமிலாவாதாரமனைத்தினுக்கும், புகல்சிவனேநித்தமகாதாரமாகப் பொருந்துவதான்மகாதாரனுவனன்றே. (கூ)

(வியாசன்-அத்தா-பதி.)

உலகமெலாம்வியாபித்து வானமேபோ லோருருவாய்நிறைகின்றதன்மையாலே, யிலகுசிவன்மகாவியாசனென்னலாவ னெவைவ்யுமுணுங்காலனைனூமூறுகாயோ, டலேவுமிகும்பலவுலகாமோதனத்தையந்தத்திற்புசிக்கின்ற பான்மையாலே, நிலேமருவும்பரமசிவனத்தாவாவ னிகிலமுமேகாப்பதனுற் பதியுமாவன், (கO)

(விசுவாதிகன்-அங்கி.)

வீதலிலாப்பரமசிவனெக்காலத்தும் விசுவமெனுஞ்சராசரமாஞ்சகத்துக்கெல்லா, நீதியதாய்மேலாகநிற்பதாலே நிகழ்விசுவாதிகனென்றுநிகழ்த்தலாவன், போதமிலாச்சகத்தையெலாமங்கியேபோற் போதமளித்திலக்கியிடும் பான்மையாலே, ஞாதுருஞேயாதியிலாதிலங்காநின்ற ஞானகனப்பரமசிவனங்கியாவன். (கக)

(பூதபாலன்-ஈசுவரன்-ஈசானன்-பர்த்தா.)

பூதமெனச்சொல்லிய வெச்சீவருக்கும்போகமொடுமோட்சத்தை யளித்துக்காக்கு, நீதியதாம்பரசிவனேபூதபால னிகிலம்குமாந்தரனுய் நின்றெப்போது, மேதமறவங்கங்கேயேவலாலே யீசுவரனீ

சானனிரண்டுமாவ, ஞேதியவாயாவையுமே பாவிக்கின்ற வொழுக்கத்தாற்பரமசிவன் பத்தாவாவன்.

(அற்தா-ரிஷி-தேவன்-ஈன்றோன்.)

அகிலசராசரசகமு மழிப்பதாலே யச்சிவனே யற்தாவென்றறையலாவன், சகலமுமேயபரோட்ச மாகவென்றுஞ் சற்றும்விடாதறிவதனாற் பரமன்றானே, நிகழுமகாரிஷியாவனென்றுமெங்கு நிறைஞானவடிவாக நிகழ்வதாலே, திகழ்தேவனெனலாவன்பொய்யாயெல்லாஞ் சிருட்டிக்குந்திறமையினாலீன்றோனவன். (க௩)

(விண்டு-நாசமில்லான்-பிரவு.)

பூரணமாய்ப்பரமசிவன் வியாபித்தெங்கும் புரையறவேநிறைந்ததனால் விண்டுவாவன், காரியமாஞ்சகமெல்லா நசித்தபோதுங் காரணமாம்பரமசிவனசியாதத்தாற், பூரணமாமவனென்று நாசமில்லான் புகலுசடாசடமான சகத்துக்கெல்லாங், காரணமாம் பரமசிவனாதனால கணக்கதனாற் ப்ரவுவாகச்செப்பலாவன். (க௪)

(பிராணன்-பூமா-புமான்.)

எங்குநிறைந்தனைத்தையுமே யேவாநின்ற வீசனுயிர்க்குயிரானபான்மையாலே, பங்கமிலாப்பிராணனெனப்பகரலாவன் பரிச்சேதமேதொன்றுமின்றியென்றுங், துங்கசுகவடிவாகித்துவிதமின்றித் துரியவடிவாதலினாற்பூமாவாவன், மங்குசரீரங்களிடை



யான்மாவாக மன்னுவதாற்புமானெனவும் புகலலாவன். (க௫)

(அரன்-அந்தரியாமி-ஆன்மா-சாசுவதன்.

பத்தருடையிடரையெலாமரிப்பதாலே பரமசிவனரனவன்மற்றுமன்றே, னித்தமுமேயனைத்துக்குமுள்ளாய்நின்று நீதியுறவேவுதலா லந்தரியாமி, யத்தனவனனைவற்கு நிசமாம்ரூபமாகிநிறைந்திருப்பதனாலான்மாவாவன், சத்தியமாய்ச்சந்ததமு மிருப்பதாலே சங்கரனேசாசுவதனவனென்றும். ()

(சங்கமிலான்-தொந்தமிலான்

சனாதனன் - அக்கரன்.)

அந்தணரே பரமசிவ னாகாசம்போ லற்பமுமோர் பற்றுமிலாப்பான்மையாலே, தொந்தமதாஞ்சங்கமிலான் மற்றுமன்னோன் றுவிதமிலாத்தன்மையினாற்றொந்தமில்லான், சந்ததமுமோர்வடிவேயாவதாலே சனாதனனுமற்றுமவனெக்காலத்து,மந்தமுறாச்சொரூபமதா யிருப்பதாலே யவினாசியாகியவக்கரமுமாவன். (க௭)

(தகராகாசன்.)

பிரமபுரமெனுமிந்தத்தேகத்தின்கண் பிறங்குவதாய்ச்சிறிதாகத்தகரமென்னு, முளைசெயுமோர் மனக்கமலமுளதாமீதி லுணர்வுருவாயாகாசநிகரோயாகச், சருவசககற்பனையுமுதிப்பதற்குச் 'சலனமிலாவதிட்டானமானவீச, னிருளறவேயிலங்குவதா

ற்றகராகாச னென்று மறைமுடிவதனு விசைக்கலாவன். (௧௮)

(புராதனன். அபரோட்சன். அது.)

பரமசிவனெப்போதும் பழமையான பான்மையினுற் புராதனனென்றுரைக்கலாவன், சருவர்க்குஞ் சந்ததமுமான்மாவாகச் சாட்சாத்தாயகமகமென்றிலங்கலாலே, யரியசிவனபரோட்சனென்னலாவனது நீயேயென்னு மகாவாக்கியத்தி, லுரைசெய்தவது வென்னும்பொருளாய்நின்ற வொழுக்கத்தாலதுவென்று முரைக்கலாவன். (௧௯)

(பிரத்தியகான்மா.)

வித்தரமாந்தன்னிடையே மாயையாலே விதம்விதமாய்க்கற்பிக்கப் பட்டதாகிச், சத்திலதாய்ச்சித்திலதாயின்பில்லாதாய்ச் சஞ்சலமாய்ச் சாரலுறு மகங்காராதி, யித்திரளின் விலட்சணமாயகம்பதத்தி னிலக்கியமாயிவைக்கெல்லா முள்ளுமாகிச், சத்தியசிற் சுககனமாய சலமானசங்கரனே சந்தமும் பிரத்தியகான்மா. (௨0)

ஈதுமுதல்வெகுவிதமாய் வேதாந்தந்தங் களிசைத்ததிரு நாமங்களிசைந்தோனை, போதகனப்பாசிவனே பத்தருய்யப் புகழுமையாந்தேவியுடன் பொருந்திளேனுய்ச், சீதமதிக் கங்கைதிகழ் சடையணிந்துசீர்பெறுமுக்கண்ணீலகண்டமாதி, நீதிவிலக்கணமுற்றுத் திகழாநின்ற திவ்வியமங்களமானவடிவாய்த்தோன்றும். (௨௧)

சொரூபநாமம் முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## ஆத்மாஞத்மவைலட்சண நிருபகம்.

---

(ஆத்மாஞத்மவைலட்சணியம் நிரூபிக்கிறோம்.)

அவையாவன.

தேகேந்திரியாதிகள் அநித்தியங்கள், ஆத்மா நித்தியன்.

தேகேந்திரியாதிகள் அசுத்தங்கள், ஆத்மா சுத்தன்.

தேகேந்திரியாதிகள் சடரூபங்கள், ஆத்மா போதரூபன்.

தேகேந்திரியாதிகள் துக்கரூபங்கள், ஆத்மா சுகருபன்.

தேகேந்திரியாதிகள் திரிசியங்கள், ஆத்மா திருஷ்டா.

தேகேந்திரியாதிகள் சவிகாரங்கள், ஆத்மா நிருவிகாரன்.

தேகேந்திரியாதிகள் நாஞரூபங்கள், ஆத்மா ஏகருபன்.

தேகேந்திரியாதிகள் சாபேட்சைப் பிரகாசங்கள், ஆத்மா நிராபேட்சைப்பிரகாசன்.

தேகேந்திரியாதிகள் பரிச்சின்னங்கள், ஆத்மா அபரிச்சின்னன்.

தேகேந்திரியாதிகள் சகம்பங்கள், ஆத்மா நிஷ்கம்பன்·

தேகேந்திரியாதிகள் ஆதேயங்கள், ஆத்மா ஆதாரன்

தேகேந்திரியாதிகள் சாவயங்கள், ஆத்மா நிரவயவன்.

தேகேந்திரியாதிகள் அப்பிரகாசங்கள், ஆத்மா பிரகாசன்.

தேகேந்திரியாதிகள் ஆதியந்தசகிதங்கள், ஆத்மா ஆதியந்தரகிதன்.

தேகேந்திரியாதிசள் சுசாதியவிசாதியசுவகதபேதங்கள், ஆத்மா சுசாதிய விசாதிய சுவகதபேதரகிதன்.

தேகேந்திரியாதிகள்காரியங்கள், ஆத்மா காரணன்.

தேகேந்திரியாதிகள் குணம், ஆத்மா நிர்க்குணன்.

இந்தப்பிரகாரம் தேகேந்திரியாதிகளுக்கும் ஆத்மாவுக்கும் வைலட்சணியம் நன்றாய் விசாரித்து அந்த ஆத்மாவே நானென்றெவனறிகிறானோ-அவனேமுத்தன்-அவனேசர்வக்ஞன் - அவனேவித்துவான்-இப்படி சுருதிதாற்பரியம்.

ஆத்மாநாத்மவைலட்சணநிருபகம்

முற்றுப்பெற்றது.

---

சர்வஞ்சின்மயம்,

## பரிசோதனபத்திரம்.

---

| புத்தகப்பெயர். | பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|
| ஞானவாசிட்டக் கதைகளின் அவதாரிகை. | ரு | | அ | விந்தின் | விந்திரன். |
| ஷ | ,, | | கரு | ககையிற் | கதையிற். |
| பகவற்கிதைஅத்தியாயங்களின் அவதாரிகை. | உச | | கஅ | சேததிரக்ஞ | சேத்திரக்ஞ. |
| பிரமகிதை அத்தியாயங்களின் அவதாரிகை. | ஙo | | சு | கண்னுக்கு | கண்ணுக்கு. |
| உபநிடதம் | ஙஅ | | உங | செடசாட்சி | செடசாட்சி. |
| ஷ | சக | உஉ | உo | ரியாவருஞ | ரியாவருஞ். |
| சொரூபசாரம் | ருச | சக | ச | லெடுத் | லெடுத்த. |
| சுருதிசாரமகாவாக்கியம். | சுச | க | ச | பிர்மமோ | பிர்ம்மோ. |
| ஷ | ,, | ,, | ரு | | |
| ஷ | ,, | | சு | | |
| ஷ | ,, | உ | ச | பரிணமா | பரிணம. |
| ஷ | ,, | ,, | எ | பிர்மமோ | பிர்ம்மோ. |